அழகப்பா பல்கலைக்கழகம்

முதுகலை தமிழ் முதலாம் ஆண்டு இரண்டாம் பருவம்

# பக்தி இலக்கியம்

தாள் குறியீடு - 411201

தொகுப்பு

முனைவர் சொ. அருணன்

# அலகு - 2

ஒன்பதாம் திருமுறை – திருவிசைப்பா – கருவூர்த் தேவர் – தஞ்சை இராசரசேச்சரம் – உலகெலாம் தொழவந்து என்று தொடங்கும் பதிகம். கண்டராதித்தர் – கோயில் – மின்னார் உருவம் என்று தொடங்கும் பதிகம் – திருமந்திரம் – திருமூலர் – திருவடிப் பேறு (15) பாடல்கள் – காரைக்காலம்மையார் – திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம் (10 பாடல்கள்)

# அலகு - 3

நம்மாழ்வார் – முதற்பத்து – நான்காம் திருவாய்மொழி – ‘அம்சிறைய மடநாராய்’ பாசுரம் (10 பாடல்கள்) – பெரியாழ்வார் – முதற்பத்து – மூன்றாம் திருமொழி – ‘மாணிக்கம் கட்டி வயிரம் இடைக்கட்டி’ பாசுரம் (10 பாடல்கள்) ஆண்டாள் – நாச்சியார் திருமொழி – ஒன்பதாம் திருமொழி – திருமாலிருஞ்சோலை – ‘சிந்துரச் செம்பொடிபோல்’ பாசுரம் (10 பாடல்கள்)– குலசேகராழ்வார் – பெருமாள் திருமொழி – ஐந்தாம் திருமொழி – வித்துவக் கோட்டு அம்மானை வேண்டுதல் ‘தருதுயாம் தடாயேல்’ பாசுரம் (10 பாடல்கள்)

# கருவூர்த் தேவர்

கருவூர்த் தேவர் ஒன்பதாம் திருமுறையில் சேர்க்கப்பட்டுள்ள திருவிசைப்பா பாடிய புலவர். இவர் கி.பி.10ஆம் நூற்றாண்டின் கடைப்பகுதியிலும், 11ஆம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் வாழ்ந்தவர் ஆவார்.



# கருவூர்த் தேவர்

திருவிடைமருதூரில் இறைவனிடம் திருவடிதீட்சை பெற்றார். இவரின் உருவச்சிலை கருவூர் பசுபதீஸ்வரர் கோயிலிலும், தஞ்சைப் பெரிய கோயிலிலும் இருக்கிறது



# கருவூர்த் தேவர்

கருவூர்த் தேவர் கருவூரில் தோன்றிய ஒரு சித்தர். தஞ்சைத் சோழமன்னன் முதலாம் ராஜராஜனின் குருவாகவும் விளங்கினார். தஞ்சைப் பிரகதீஸ்வரர் கோவிலில் சிவலிங்கத்தை ஆவுடையாருடன் சேர்ந்து பிரதிஷ்டை செய்யக் கருவூரார் உதவினார். பன்னிரு திருமுறைகளில் திருவிசைப்பா என்னும் ஒன்பதாம் திருமுறையில் ஒரு பகுதியைக் கருவூரார் இயற்றினார்



# கருவூர்த் தேவர்



1. தில்லை
2. திருக்களந்தை
3. திருக்கீழ்கோட்டூர்
4. திருமுகத்தலை
5. திரைலோக்கிய சுந்தரம்
6. கங்கைகொண்ட சோளேச்சரம்
7. திருப்பூவனம்
8. திருச்சாட்டியக்குடி
9. தஞ்சை இராசராசேச்சுரம்
10. திருவிடை மருதூர்

ஆகிய 10 ஊர்களுக்குச் சென்று 10 பதிகங்கள் பாடியுள்ளார். இவற்றில் 103 பாடல்கள் உள்ளன

# திருவிசைப்பா - திருப்பல்லாண்டு

உலகெலாம் தொழவந் தெழுக திர்ப்பரிதி ஒன்றுநூ றாயிர கோடி

அலகெலாம் பொதிந்த திருவுடம் பச்சோ அங்ஙனே யழகிதோ அரணம்

பலகுலாம் படைசெய் நெடுநிலை மாடம் பருவரை ஞாங்கர்வெண் டிங்கள்

இலைகுலாம் பதணத் திஞ்சிசூழ் தஞ்சை இராசரா சேச்சரத் திவர்க்கே.

# திருவிசைப்பா - திருப்பல்லாண்டு

கோட்டை, பலவாக அழகு பொருந்திய பொருட் கூட்டத்தால் எடுப்பிக்கப்பட்ட நெடுநிலையாகிய எழுநிலை மாடங்கள் ஆகியவை, வெள்ளிய சந்திரன் பெரிய மலைப்பகுதியிலே தவழ்வதுபோல வெள்ளித்தகடுகள் மதிலிலுள்ள மேடைகளில் பதிக்கப்பட்டுக் காட்சி வழங்கும் மதில்களால் சூழப்பட்ட தஞ்சையிலுள்ள இராசராசேச்சரம் என்ற திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானுக்கு, உலகங்களெல்லாம் தொழுமாறு வந்து தோன்றுகின்ற நூறாயிரகோடி பரிதிகளின் ஒளியினை உடைய சூரியன் உளதாயின் அதன் அளவாகிய ஒளியினை உடைய திருவுடம்பு வியக்கத்தக்கவகையில் பேரழகினதாக உள்ளது.

# திருவிசைப்பா - திருப்பல்லாண்டு

நெற்றியிற் கண்ணென் கண்ணினின்றகலா நெஞ்சினில் அஞ்சிலம் பலைக்கும்

பொற்றிரு வடிஎன் குடிமுழு தாளப்புகுந்தன போந்தன வில்லை

மற்றெனக் குறவென் மறிதிரை வடவாற் றிடுபுனல் மதகில்வாழ் முதலை

எற்றுநீர்க் கிடங்கின் இஞ்சிசூழ் தஞ்சை இராசரா சேச்சரத் திவர்க்கே.

# திருவிசைப்பா - திருப்பல்லாண்டு

உயர்ந்து மடங்குகின்ற அலைகளை உடைய வடவாற்றில் ஓடும் நீரை, அதன்கண் அமைந்த தலைமதகில் வாழும் முதலைகள் வாரி எறிகின்ற நீரால் நிரம்பிய அகழிகளால் சூழப்பட்ட மதில்களை உடைய தஞ்சை இராசராசேச்சரத்து எம்பெருமானுடைய நெற்றிக்கண் என் கண்களினின்று அகலமாட்டாது. என் நெஞ்சினில் அழகிய சிலம்பு ஒலித்துக்கொண்டிருக்கிறது. அழகிய திருவடிகள் அடியேனுடைய குடி முழுதையும் ஆள்வதற்கு அடியேனிடம் புகுந்தன. அடியேனை விடுத்துப் புறத்துச் செல்லவில்லை. இங்ஙன மாதலின் அடியேனுக்கு வேறு யாது உறவு வேண்டும்?

# திருவிசைப்பா - திருப்பல்லாண்டு

சடைகெழு மகுடம் தண்ணிலா விரிய வெண்ணிலா விரிதரு தரளக்

குடைநிழல் விடைமேற் கொண்டுலாப் போதும் குறிப்பெனோ கோங்கிண ரனைய

குடைகெழு நிருபர் முடியொடு முடிதேய்ந் துக்கசெஞ் சுடர்ப்படு குவையோங்

கிடைகெழு மாடத் திஞ்சிசூழ் தஞ்சை இராசரா சேச்சரத் திவர்க்கே.

# திருவிசைப்பா - திருப்பல்லாண்டு

கோங்கம் பூங்கொத்துக்களை ஒத்த வெண் குடைகள் பொருந்திய அரசர்களுடைய கிரீடங்கள் நெருக்கம் காரணமாக ஒன்றோடொன்று உராய்வதனால் தெறித்து விழுந்த செம்மையான ஒளியோடு கிடக்கும் இரத்தினக் குவியல்கள் மிக இருக்கும் வீதிகளில் பொருந்திய மாடங்களை மதில்கள் சூழும் தஞ்சை இராசராசேச்சரத்து எம்பெருமான், சடையிலே பொருந்திய கிரீடம் தெளிந்த நிலாப் போன்ற ஒளியைப் பரப்ப, வெள்ளிய ஒளியைப் பரப்பும் விரிக்கப்பட்ட முத்துக்குடை நிழலிலே காளை மீது இவர்ந்து திருவுலா வரும் கருத்துத்தான் யாதோ? என்று எம்பெருமான் வீதி உலாக் காட்சியில் அவனைக்கண்டு காதல் கொண்ட இளமகள் ஒருத்தியின் கூற்று அமைந்தவாறு.

# திருவிசைப்பா - திருப்பல்லாண்டு

வாழிஅம் போதத் தருகுபாய் விடயம் வரிசையின் விளங்கலின் அடுத்த

சூழலம் பளிங்கின் பாசல ராதிச் சுடர்விடு மண்டலம் பொலியக்

காழகில் கமழு மாளிகை மகளிர் கங்குல்வாய் அங்குலி கெழும

யாழொலி சிலம்பும் இஞ்சிசூழ் தஞ்சை இராசரா சேச்சரத் திவர்க்கே.

# திருவிசைப்பா - திருப்பல்லாண்டு

வடவாற்று நீரின் அலைகளில் பரவிய பொருள்கள் சார்ந்துள்ள சுற்றிடத்தில் வரிசையாக விளங்கும் தோற்றமாகிய பச்சிலையோடு கூடிய மலர் முதலியவற்றின் உருவத்தைப் பொருந்திய வட்டம் தஞ்சை நகரைச் சுற்றிலும் பச்சிலையும், பூவும் ஓவியமாகத் தீட்டப்பட்ட பளிங்குச் சுவர் அமைக்கப்பட்டது போலத் தோற்றமளிக்கவும், கரிய அகில் புகைமணம் வீசும் மாளிகைகளில் உள்ள மகளிர் இராக்காலத்தில் தம்விரல்களால் மீட்டும் யாழ்ஒலி எம்பெருமானை உகப்பிற்காகவே ஒலிக்கின்றது.

# திருவிசைப்பா - திருப்பல்லாண்டு

எவருமா மறைகள் எவையும்வா னவர்கள் ஈட்டமும் தாட்டிருக் கமலத்

தவருமா லவனும் அறிவரும் பெருமை அடல்அழல் உமிழ்தழல் பிழம்பர்

உவரிமா கடலின் ஒலிசெய்மா மறுகில் உறுகளிற் றரசின தீட்டம்

இவருமால் வரைசெய் இஞ்சிசூழ் தஞ்சை இராசரா சேச்சரத் திவர்க்கே.

# திருவிசைப்பா - திருப்பல்லாண்டு

உவர்ப்பை உடைய பெரிய கடல் போலப் பேரொலி கேட்கப்படும் பெருந்தெருக்களில் உலவும் பெரிய அரச உவாக்களின் கூட்டம் ஏறும்படியான மலையைப் போல அமைந்த மதில்களால் சூழப்பட்ட தஞ்சை இராசராசேச்சரத்தில் உறையும் பெருமானார் மக்கள் யாவரும், சிறந்த வேதங்களாகிய எவையும், தேவர்கள் கூட்டமும், தாமரையில் வாழும் பிரமனும், திருமாலும் அறியமுடியாத பெருமையை உடையவராய்ப் பிறரை வருத்தும் வெப்பமுடைய தழல் வடிவினராய் உள்ளார்.

# திருவிசைப்பா - திருப்பல்லாண்டு

அருளுமா றருளி ஆளுமா றாள அடிகள்தம் அழகிய விழியும்

குருளும்வார் காதும் காட்டியான் பெற்ற குயிலினை மயல்செய்வ தழகோ

தரளவான் குன்றில் தண்ணிலா ஒளியும் தருகுவால் பெருகுவான் தெருவில்

இருளெலாங் கிழியும் இஞ்சிசூழ் தஞ்சை இராசரா சேச்சரத் திவர்க்கே.

# திருவிசைப்பா - திருப்பல்லாண்டு

முத்தினாலாகிய பெரியமலைபோலக் குளிர்ந்த நிலவொளி வீசும் மாடங்களின் திரட்சி மிக்கிருக்கின்ற பெரிய தெருக்களால் இருட்டு எல்லாம் நீக்கப்படுகின்ற, மதில்களால் சூழப்பட்ட தஞ்சை இராசராசேச்சரத்து உறையும் எம்பெருமான் அருள வேண்டிய முறைப்படி அருள்செய்து ஆட்கொள்ள வேண்டிய முறைப்படி அடிமைகொள்ளுவதற்குத் தம் அழகிய விழிகளையும், சுருண்ட சடைமுடியையும், நீண்ட காதுகளையும், மற்றவர் காணுமாறு காட்சி வழங்கி, யான் பெற்ற குயில் போன்ற இனிய குரலை உடைய என்மகளைக் காம மயக்கம் அடையுமாறு செய்துள்ள செயல் அவர் அருள் உள்ளத்துக்கு அழகு தருவது ஆகுமா?

# திருவிசைப்பா - திருப்பல்லாண்டு

தனிப்பெருந் தாமே முழுதுறப் பிறப்பின் தளிர்இறப் பிலையுதிர் வென்றால்

நினைப்பருந் தம்பாற் சேறலின் றேனும் நெஞ்சிடிந் துருகுவ தென்னோ

சுனைப்பெருங் கலங்கற் பொய்கையங் கழுநீர்ச் சூழல்மா ளிகைசுடர் வீசும்

எனைப்பெரு மணஞ்செய் இஞ்சிசூழ் தஞ்சை இராசரா சேச்சரத் திவர்க்கே.

# திருவிசைப்பா - திருப்பல்லாண்டு

சுனையைப் போல ஆழமான, மூழ்கும் மகளிருடைய சந்தனச்சேற்றால் கலங்குதலை உடைய பொய்கைகளில் உள்ள கழுநீர்ப்பூக்கள் தம்மைச் சுற்றிலும் உள்ள ஒளிவீசும் மாளிகைகளில் எத்துணைப் பெரிய நறுமணத்தையும் பரப்பும் படியான, மதில்களால் சூழப்பட்ட தஞ்சையில் உள்ள இராசராசேச் சரத்துப் பெருமானார், தனிப் பெருந்தலைவராய் எல்லாவிடத்தும் வியாபித்து இருக்கவும், பிறப்பாகிய தளிர் இறப்பாகிய இலை உதிர் நிலையை எய்திற்றாயின் அதுபோது நினைத்தற்கும் அரிய இவர்பால் செல்லுதல் இயலாமை அறிந்தும் மனம் கலங்கி இப்பெருமான் திறத் தில் மனம் உருகுவது யாது கருதியோ? தொடக்கம் தொட்டே இறை வனை நினைந்து உருகும் உள்ளத்தோடு செயற்படவேண்டும் என்பது.

# திருவிசைப்பா - திருப்பல்லாண்டு

பன்னெடுங் காலம் பணிசெய்து பழையோர் தாம்பலர் ஏம்பலித் திருக்க

என்னெடுங் கோயில் நெஞ்சுவீற் றிருந்த எளிமையை யென்றுநான் மறக்கேன்

மின்னெடும் புருவத் திளமயி லனையார் விலங்கல்செய் நாடக சாலை

இன்னடம் பயிலும் இஞ்சிசூழ் தஞ்சை இராசரா சேச்சரத் திவர்க்கே.

# திருவிசைப்பா - திருப்பல்லாண்டு

நீண்ட புருவத்தினை உடையராய், மின்னலைப் போன்று உடல் ஒளி வீசுகின்ற, இளமயில் போன்ற தம் இனிய பெண்மையை உடைய மகளிர் மலைபோல நிலைபெற்ற நாடக சாலைக்கண் இனிய கூத்தினைப் பழகும், மதில்களால் சூழப்பட்ட தஞ்சையில் உள்ள இராசராசேச்சரத்து எம்பெருமான் பற்பல ஆண்டுகள் திருத் தொண்டு செய்து பழைய அடியவர்கள் எம்பெருமான் திருவருளை வேண்டி வருந்தியிருக்கவும், அடியேனுடைய உள்ளத்தை எம்பெரு மான் தன்னுடைய பெரிய கோயிலாகக்கொண்டு அதன்கண் வீற்றிருக் கும் அவன் எளிவந்த தன்மைபற்றி அடியேன் யாது கூற வல்லேன்?

# திருவிசைப்பா - திருப்பல்லாண்டு

மங்குல்சூழ் போதின் ஒழிவற நிறைந்து வஞ்சகர் நெஞ்சகத் தொளிப்பார்;

அங்கழற் சுடராம் அவர்க்கிள வேனல் அலர்கதி ரனையர் வா ழியரோ

பொங்கெழில் திருநீ றழிபொசி வனப்பிற் புனல்துளும் பவிர்சடை மொழுப்பர்

எங்களுக் கினியர் இஞ்சிசூழ் தஞ்சை இராசாரா சேச்சரத் திவர்க்கே.

# திருவிசைப்பா - திருப்பல்லாண்டு

மதில்களால் சூழப்பட்ட தஞ்சையில் இராசராசேச் சரத்தில் கோயில்கொண்டு அருளும் எம்பெருமான், மேகத்தால் மறைக்கப்பட்ட சூரியனைப்போல, தாம் எங்கும் நிறைந்திருந்தும், வஞ்சனை உடையவர்கள் உள்ளத்தில் மறைந்தே இருப்பார். எரிகின்ற விளக்குப்போல ஒளி உடையராய் இருக்கின்ற அன்பர்களுக்கு வேனிற்காலத்து ஒளிக்கதிர்களை விரித்து விளங்குகின்ற சூரியனைப் போலப் பேரொளி வீசி நிற்பார். மேம்பட்ட அழகிய உடம்பில் பூசப் பட்ட திருநீறு அழியும்படியாகக் கசியும் அழகினை உடைய கங்கை நீர் ததும்புகின்ற சடைமுடியை உடைய இவரை வணங்கி வாழ்த்துதற் பொருட்டு அடியேன் வாழ்வேனாக - இது தலைமகள் கூற்று.

# திருவிசைப்பா - திருப்பல்லாண்டு

தனியர்ஏத் தனைஓ ராயிர வருமாந் தன்மையர் என்வயத் தினராங்

கனியர்அத் தருதீங் கரும்பர்வெண் புரிநூற் கட்டியர் அட்டஆ ரமிர்தர்

புனிதர்பொற் கழலர் புரிசடா மகுடர் புண்ணியர் பொய்யிலா மெய்யர்க்

கினியரெத் தனையும் இஞ்சிசூழ் தஞ்சை இராசரா சேச்சரத் திவர்க்கே.

# திருவிசைப்பா - திருப்பல்லாண்டு

இஞ்சிசூழ் தஞ்சை இராசராசேச்சரத்து எம்பெருமான் தாம் ஒருவராகவும் இருப்பார். எத்தனையோ ஆயிரப் பொருள்களாக நிற்கும் தன்மையையும் உடையார். அடியேனுக்கு உரியவராகிய அப்பெருமான், பழமும், இனிமையைத் தருகின்ற அத்தன்மையை உடைய கரும்பும் போன்றவர். வெள்ளிய பூணூலை அணிந்தவர். மிகக் காய்ச்சிய பால்போல இனியர். தூயர். அழகிய வீரக் கழலை அணிந்தவர். முறுக்கிய சடையை மகுடம்போல அணிந்தவர். புண்ணிய வடிவினர். பொய் என்பது இல்லாத மெய்யன்பர்களுக்கு மிக இனியர். இவரை வணங்கி வாழ்த்துதற் பொருட்டு அடியேன் வாழ்வேனாக - இதுவும் தலைமகள் கூற்று.




# கண்டராதித்தர்

திருவிசைப்பாவை அருளிச்செய்த ஆசிரியர்களில் ஐந்தாமவர் கண்டராதித்தர். இவர் தில்லைச் சிற்றம்பலத்திற்குப் பொன் வேய்ந்து புதுப்பித்த முதற் பராந்தக சோழன் (கி.பி. 907-953) என்பவனின் இரண்டாவது திருமகனாராவர்.

# கண்டராதித்தர்

கண்டன் கோவை, கண்டன் அலங்காரம் என்னும் நூல்களைப் பாடி ஒட்டக்கூத்தர் இவருக்குப் பெருமை சேர்த்துள்ளார். இவர் பல சிவன் கோயில்களுக்குத் திருப்பணி செய்துள்ளார். புறச் சமயத்தினரையும் நன்கு மதித்தார். கல்வெட்டுகளில் இவர் சிவஞான கண்டராதித்தர் என்று குறிப்பிடப்படுகிறார்

# கண்டராதித்தர்

கண்டராதித்த சோழர் கி.பி. 950-957 சோழநாட்டைத் திறம்பட ஆண்டவர். சிறந்த சிவபக்தர், தேவாரத் திருமுறைகளிடத்து மிக்க பற்றுடையவர். கண்டராதித்தர் தில்லைப்பதியில் எழுந்தருளிய நடராசப் பெருமானிடத்தும், திருவாரூர்த் தியாகேசப் பெருமானிடத்தும் பெரிதும் ஈடுபாடுடையவர், செந்தமிழ்ப் புலமை சான்ற இம் மன்னர் பல சிவாலயத் திருப்பணிகளைப் புரிந்துள்ளார்.

# கண்டராதித்தர்

புறச்சமயிகளை மதித்துப் போற்றும் உயர் பண்பு இவர்பால் இருந்தது. திருச்சிராப்பள்ளிக்கு வடக்கே கொள்ளிடத்திற்கு வடகீழ்ப் பகுதியில் கீழ் மழநாட்டின் தலைநகரான திருமழபாடிக்கு மேற்கே ஒன்றரை கி.மீ. தொலைவில் உள்ள ஊர் ஒன்று கண்டராதித்த சதுர்வேதிமங்கலம் என்ற பெயரால் வழங்கப்பெற்றது. அது இப்போது கண்டிராச்சியம் என வழங்குகிறது.

# கண்டராதித்தர்

கண்டராதித்தர் தில்லைப் பெருமானைப்பாடிய திரு விசைப்பாப் பதிகம் ஒன்றேயாகும். அப்பதிகத்தின் எட்டாம் திருப் பாடலில் தம் முன்னோர் சிறப்பியல்புகளையும், திருக்கடைக்காப்புச் செய்யுளில் தம்மைக் கோழிவேந்தன் (கோழி – உறையூர்) தஞ்சையர்கோன் என்றும் கூறிக்கொள்கின்றார்.

# கண்டராதித்தர்

கண்டராதித்தரின் மனைவியார் மழவர்குலத்துத் தோன்றிய செம்பியன் மாதேவியாராவர். இவர் உத்தமசோழன் (மதுராந்தகன்) என்பவனை மகனாகப்பெற்றவர். இவ்வம்மையார் சிறந்த சிவபக்தர். கி.பி. 957-ல் தம் கணவன் சிவபெருமான் திருவடி நிழலையடைந்த போது இவ்வம்மையார் தம் புதல்வனைக்காக்கும் கடமையை மேற் கொண்டு, தாமும் உடன்கட்டை ஏறாது உயிருடன் வாழ்ந்தார்.

# கண்டராதித்தர்

கோனேரிராஜபுரம் (திருநல்லம்) திருவக்கரை முதலிய சிவாலயங்களுக்குத் திருப்பணி புரிந்தவர். சிவபக்தியிலும், சிவத்தொண்டிலும் பெரிதும் ஈடுபட்ட காரணத்தால் இவ்வம்மையார் 'மாதேவடிகள்' என்ற சிறப்புப்பெயர் பெற்றார். முதல் இராசராசசோழன் தென்னாட்டைச் சிவனுறை திருநாடாகச் செய்ததற்குச் செம்பியன் மாதேவியார் தூண்டுகோலாக உதவினார். இராஜராஜசோழனின் 16-ஆம் ஆட்சியாண்டில் கி.பி. 1001-ல் இவ்வம்மையார் இறைவன் திருவடி நீழலை அடைந்தார்.

# கண்டராதித்தர் - கோயில்

மின்னார் உருவம் மேல்வி ளங்க வெண்கொடி மாளிகைசூழப்

பொன்னார் குன்றம் ஒன்று வந்து நின்றது போலும்என்னாத்

தென்னா என்று வண்டு பாடும் தென்றில்லை யம்பலத்துள்

என்னா ரமுதை எங்கள் கோவை என்றுகொல் எய்துவதே. 1

# கண்டராதித்தர் - கோயில்

மின்னலைப் போல ஒளிவீசும் மகளிருடைய வடிவங்கள் மாடங்களின் மேல்நிலையில் விளங்கவும், வெண்கொடிகள் அம்மாளிகைகளைச் சுற்றிலும் பறக்கவும் அமைந்த அழகான தில்லை என்ற திருத்தலத்தில், பொன்னாலாகிய மலை ஒன்று வந்து அவ்வூரில் தங்கிவிட்டது போலும் என்று கருதுமாறு, தென்னா என்று இசைஒலியை எழுப்பி வண்டுகள் பாடும் அவ்வூரின் பொன்னம்பலத்தில் எழுந்தருளியிருக்கும், என் கிட்டுதற்கரிய அமுதமாகிய எங்கள் தலைவனை அடியேன் என்று கிட்டப்பெறுவேன்?

# கண்டராதித்தர் - கோயில்

ஓவா முத்தீ அஞ்சு வேள்வி ஆறங்க நான்மறையோர்

ஆவே படுப்பார் அந்த ணாளர் ஆகுதி வேட்டுயர்வார்

மூவா யிரவர் தங்க ளோடு முன்னரங் கேறிநின்ற

கோவே உன்றன் கூத்துக் காணக் கூடுவ தென்றுகொலோ. 2

# கண்டராதித்தர் - கோயில்

என்றும் அணையாத முத்தீக்களையும், ஐவகை வேள்விகளையும், ஆறு அங்கங்களையும், நான்கு வேதங்களையும் முறையே வளர்த்து, நிகழ்த்தி, கற்று, ஓதும் அந்தணாளராய், பசுக்களின் நெய், பால், தயிர் இவற்றை ஆகுதிகளாகச் சொரிந்து வேள்விகளை நிகழ்த்தி மேம்பட்ட மூவாயிரவர் வேதியரோடு, முன் ஒரு காலத்துப் பதஞ்சலி முனிவர் உன் கூத்தினைக்காண நாட்டிய அரங்காகிய திருச்சிற்றம்பலத்தில் எழுந்தருளிய பெருமானே! உன் திருக் கூத்தினைக் காணும் வாய்ப்பு அடியேனுக்கு என்று கிட்டுமோ?

# கண்டராதித்தர் - கோயில்

முத்தீ யாளர் நான்ம றையர் மூவா யிரவர்நின்னோ

டொத்தே வாழுந் தன்மை யாளர் ஓதிய நான்மறையைத்

தெத்தே யென்று வண்டு பாடுந் தென்றில்லை யம்பலத்துள்

அத்தாவுன்றன் ஆடல் காண அணைவதும் என்றுகொலோ 3

# கண்டராதித்தர் - கோயில்

முத்தீ ஓம்பி நான்மறை ஓதும் மூவாயிரவராய் உன் திருவுள்ளக் குறிப்பிற்கு ஏற்ப வாழும் தன்மை உடையவர்கள் ஓதிய நான்கு வேதங்களையும் தெத்தே என்று இசை எழுப்பி வண்டுகள் பாடும் அழகிய தில்லையின் சிற்றம்பலத்தில் உள்ள தலைவனே! உன்னுடைய ஞான ஆனந்தத் திருக்கூத்தினைத் தரிசிக்க அடியேன் உன்னிடம் வந்து சேருவது எந்த நாளோ!

# கண்டராதித்தர் - கோயில்

மானைப் புரையும் மடமென் னோக்கி மாமலை யாளோடும்

ஆனஞ் சாடுஞ் சென்னி மேல்ஓர் அம்புலி சூடும்அரன்

றேனைப் பாலைத் தில்லை மல்கு செம்பொனின் அம்பலத்துக்

கோனை ஞானக் கொழுந்து தன்னைக் கூடுவ தென்றுகொலோ. 4

# கண்டராதித்தர் - கோயில்

மானின் பார்வையை ஒத்த பார்வையை உடைய ளாய் மடம் என்ற பண்பினை உடைய பார்வதியோடு, பஞ்சகவ்விய அபிடேகம் செய்யப்படும் தலையின் மீது ஒரு பிறையைச் சூடும் சிவபெருமானாய்த் தேன் போலவும், பால் போலவும் இனியனாய்த் தில்லைத் திருத்தலத்தில் விளங்குகின்ற செம்பொன்மயமான அம்பலத் தில் உள்ள தலைவனாய், ஞானக்கொழுந்தாய் உள்ள எம்பெருமானை அடியேன் கூடும் நாள் எந்நாளோ?

# கண்டராதித்தர் - கோயில்

களிவான் உலகிற் கங்கை நங்கை காதலனே அருளென்

றொளிமால் முன்னே வரங்கி டக்க உன்னடி யார்க்கருளும்

தெளிவா ரமுதே தில்லை மல்கு செம்பொனின் அம்பலத்துள்

ஒளிவான் சுடரே உன்னை நாயேன் உறுவதும் என்றுகொலோ. 5

# கண்டராதித்தர் - கோயில்

‘களித்து வாழ்தற்குரிய வானுலகிற்கு உரிய கங்கை என்ற பெண்ணின் கணவனே! எனக்கு அருள் செய்வாயாக!‘ என்று அழகை உடைய திருமால் உன் முன்னே வரம் வேண்டிப் படுத்துக் கிடக்கவும் அவனுக்கு அருளாது உன் அடியவர்களுக்கே அருள் செய்யும் தெளிவு பொருந்திய அமுதமே! தில்லைத் திருப்பதியில் விளங்குகின்ற செம்பொன்மயமான அம்பலத்துள் ஒளிவீசும் மேம் பட்ட ஒளியே! உன்னை நாய்போன்ற கடையேனாகிய நான் என்று வந்து அடைவேன்?

# கண்டராதித்தர் - கோயில்

பாரோர் முழுதும் வந்தி றைஞ்சப் பதஞ்சலிக் காட்டுகந்தான்

வாரார் முலையாள் மங்கை பங்கன் மாமறை யோர்வணங்கச்

சீரால் மல்கு தில்லைச் செம்பொன் அம்பலத் தாடுகின்ற

காரார் மிடற்றெம் கண்ட னாரைக் காண்பதும் என்றுகொலோ. 6

# கண்டராதித்தர் - கோயில்

உலகிலுள்ள மக்களெல்லாம் தன்னை வந்து வணங்கவும், பதஞ்சலி முனிவருக்காகத் திருக்கூத்து ஆடுதலை விரும்பி மேற்கொண்டவனாய், கச்சணிந்த முலையை உடைய பார்வதி பாகனாய், மேம்பட்ட வேதியர் வணங்கச் சிறப்பால் மேம்பட்ட தில்லையம்பதியின் செம்பொன் அரங்கில் திருக்கூத்து நிகழ்த்துகின்ற நீலகண்டனாகிய எம் தலைவனை எந்நாள் காண்பேனோ?

# கண்டராதித்தர் - கோயில்

இலையார் கதிர்வேல் இலங்கை வேந்தன் இருபது தோளும்இற

மலைதான்எடுத்த மற்றவற்கு வாளொடு நாள்கொடுத்தான்

சிலையால் புரமூன் றெய்த வில்லி செம்பொனின் அம்பலத்துக்

கலையார் மறிபொற் கையி னானைக் காண்பதும் என்றுகொலோ. 7

# கண்டராதித்தர் - கோயில்

இலைவடிவமாக அமைந்த ஒளி பொருந்திய வேலை ஏந்திய இலங்கை மன்னனுடைய இருபது தோள்களும் நொறுங்குமாறு செய்து, கயிலைமலையை எடுத்த அவனுக்குச் சந்திரகாசம் என்னும் வாளோடு முக்கோடி வாழ்நாளும் கொடுத் தவனாய், வில்லினால் முப்புரங்களையும் எய்த வில்லாளனாய், செம்பொன்மயமான சிற்றம்பலத்தில் மான்கன்றை ஏந்திய கையனாய் உள்ள பெருமானை அடியேன் எந்நாள் காண்பேன்?

# கண்டராதித்தர் - கோயில்

வெங்கோல் வேந்தன் தென்னன் நாடும் ஈழமுங் கொண்டதிறற்

செங்கோற் சோழன் கோழி வேந்தன் செம்பியன் பொன்னணிந்த

அங்கோல் வளையார் பாடி ஆடும் அணிதில்லை யம்பலத்துள்

எங்கோன் ஈசன் எம்மி றையை என்றுகொல் எய்துவதே. 8

# கண்டராதித்தர் - கோயில்

கொடுங்கோலினை உடைய அரசனான பாண்டிய னுடைய நாட்டினையும், இலங்கையையும் கைப்பற்றிய ஆற்றலை உடைய செங்கோலை உடைய சோழ மரபினனாய், உறையூரைக் கோநகராகக்கொண்டு சிபி மரபினனாய் ஆண்ட பராந்தகச்சோழன் பொன்வேய்ந்த, அழகிய திரண்ட வளையல்களை உடைய மகளிர் பாடியும், ஆடியும் நற்பணி செய்யும் அழகிய தில்லை அம்பலத்துள் எம்தலைவனாய், எம்மை அடக்கி ஆள்பவனாய் உள்ள எம் இறைவனை என்று அடையப்போகிறேனோ?

# கண்டராதித்தர் - கோயில்

நெடியா னோடு நான்மு கன்னும் வானவரும் நெருங்கி

முடியால் முடிகள் மோதி உக்க முழுமணி யின்திரளை

அடியார் அலகி னால் திரட்டும் அணிதில்லை யம்பலத்துக்

கடியார் கொன்றை மாலை யானைக் காண்பதும் என்றுகொலோ. 9

# கண்டராதித்தர் - கோயில்

ஓங்கி உலகளந்த திருமாலோடு பிரமனும், தேவர்களும் சந்நிதியில் நெருங்கி நிற்றலான், அவர்கள் முடிகள் ஒன்றோடொன்று மோதுதலான், சிதறிய பெரிய மணிகளின் குவியலை அடியவர்கள் திருவலகைக்கொண்டு திரட்டி வைக்கும் அழகிய தில்லை அம்பலத்துள்ள நறுமணம் கமழும் கொன்றைப் பூமாலையானாகிய சிவபெருமானை அடியேன் எந்நாள் காண்பேனோ?

# கண்டராதித்தர் - கோயில்

சீரால்மல்கு தில்லைச் செம்பொன் அம்பலத் தாடிதன்னைக்

காரார் சோலைக் கோழி வேந்தன் தஞ்சையர் கோன்கலந்த

ஆராஇன்சொற் கண்டரா தித்தன் அருந்தமிழ் மாலைவல்லார்

பேரா உலகில் பெருமை யோடும் பேரின்பம் எய்துவரே. 10

# கண்டராதித்தர் - கோயில்

சிறப்பான் மேம்பட்ட தில்லைநகரில் உள்ள செம் பொன் அம்பலத்தில் கூத்து நிகழ்த்தும் சிவபெருமானைப்பற்றி மேகங்கள் பொருந்திய சோலைகளை உடைய உறையூர் மன்னனும், தஞ்சைமாநகரில் உள்ள அரசனும் ஆகிய கண்டராதித்தன் திருவரு ளோடு கலந்து தெவிட்டாத இனிய சொற்களால் பாடிய அரிய தமிழ்ப் பாமாலையைப் பொருளுணர்ந்து கற்றுப் பாட வல்லவர்கள், ஒருமுறை சென்றால் மீண்டும் அவ்விடத்தினின்றும் திரும்பி நில உலகிற்குப் பிறப்பெடுக்க வாராத வீட்டுலகில் பெருமையோடு பேரானந்தத்தை அடைவார்கள்.

# திருமூலர்

திருமூலர் / திருமூல நாயனார், அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவரும், பதினெண் சித்தர்களுள் ஒருவரும் ஆவார். திருமூலர் வரலாற்றை நம்பியாண்டார் நம்பிகள் திருத்தொண்டர் திருவந்தாதியில் சுருக்கமாய்க் கூறுகிறார். இவர் வாழ்ந்த காலம் 5000 வருடங்களுக்கு முந்தயது எனினும் இவரால் அருளப்பட்ட திருமந்திரம் | திருமந்திரமாலை பல காலத்திற்கு பின்னரே உலகிற்கு வழங்கப்பட்டது. திருமந்திரம் 3000 பாடல்களைக் கொண்டது. இதனைச் சைவத்திருமுறை பன்னிரண்டினுள் பத்தாவது திருமுறையாய்த் தொகுத்துள்ளனர்.

# திருமந்திரம் - ஆறாம் தந்திரம் - 2. திருவடிப்பேறு

இசைந்தெழும் அன்பில் எழுந்த படியே

பசைந்தெழு நீசரைப் பாசத்தின் ஏகச்

சிவந்த குருவந்து சென்னிகை வைக்க

உவந்த குருபதம் உள்ளத்து வந்தே. 1

# திருமந்திரம் - ஆறாம் தந்திரம் - 2. திருவடிப்பேறு

வினையின்வழி மனம் சென்றவாறே செல்லுதலால், உலகவர்மேற் செல்கின்ற அன்பின்வழியே மனம் நெகிழ்ந்து செல்லுகின்ற கீழோரைப் பாசத்தினின்றும் விடுபடச் செய்தற்கு ஞானகுரு வந்து அவர்களது தலையின்மேல் தனது கையை வைத்த வுடன் அவர்களது உள்ளமாகிய பொய்கையில் அவனது திருவடிகளா கிய தாமரை மலர்கள் மலர்ந்து பொருந்தி மலர்வனவாம்.

# திருமந்திரம் - ஆறாம் தந்திரம் - 2. திருவடிப்பேறு

தாடந்த போதே தலைதந்த எம்மிறை

வாடந்த ஞான வலியையும் தந்திட்டு

வீடந்த மின்றியே ஆள்கென விட்டருட்

பாடின் முடிவைத்துப் பார்வந்து தந்ததே. 2

# திருமந்திரம் - ஆறாம் தந்திரம் - 2. திருவடிப்பேறு

தனது சத்தியை உலகுக்கு உதவ வைத்தபொழுதே, அவ்வுதவியைப்பெறும் உயிரை அந்நிலையில் வைத்த எங்கள் சிவ பிரான், பின்பு இப்பூமியில் குருவாகி வந்து பலருக்கு அருள் புரிந்தது, அஞ்ஞானமாகிய மரத்தை வெட்டி வீழ்த்தும் வாள்போல்வதாகிய ஞானத்தின் உறுதிப்பாட்டைத் தந்து, ‘வீட்டுலகத்தை எல்லையில் காலம் ஆள்க‘ என அளித்தற் பொருட்டு, மும்மலக் கட்டினின்றும் வெளிப்படுத்தி அருள் தோற்றமாகிய தனது திருவடிகளை அவரது இனிய தலையிற் சூட்டியேயாம்.

# திருமந்திரம் - ஆறாம் தந்திரம் - 2. திருவடிப்பேறு

தானவ னாகிச் சொரூபத் துவந்திட்டு

ஆன சொரூபங்கள் நான்கும் அகற்றின

ஏனைய முத்திரை ஈந்தாண்ட நன்னந்தி

தானடி முற்கூட்டித் தாபித்த துண்மையே. 3

# திருமந்திரம் - ஆறாம் தந்திரம் - 2. திருவடிப்பேறு

ஆன்மா சிவனாகி, அச்சிவனது உண்மை இயல்பில் தனது உண்மை இயல்பு பொருந்துதலால் இன்புற்று, முன்னே செயற்கையாய் வந்து பற்றிய ‘ஆணவம், கன்மம், மாயை, மாயேயம்‘ என்னும் நான்கின் இயல்புகளையும் நீக்கிநின்ற சின்முத்திரை நிலையைத் தந்து ஆட்கொண்ட சிவன், ஆங்ஙனம் ஆட்கொள்வதற்கு முன் தான் குருவாகிவந்து தனது திருவடியைச் சூட்டி, அங்ஙனம் சூட்டப்பட்டவனது உள்ளத்திலே நிலைபெறச் செய்தது உண்மை.

# திருமந்திரம் - ஆறாம் தந்திரம் - 2. திருவடிப்பேறு

உரையற் றுணர்வற் றுயிர்பர மற்றுத்

திரையற்ற நீர்போல் சிவமாதல் தீர்த்துக்

கரையற்ற சத்தாதி நான்குங் கடந்த

சொரூபத் திருத்தினன் சொல்லிறந் தோமே. 4

# திருமந்திரம் - ஆறாம் தந்திரம் - 2. திருவடிப்பேறு

இஃது இவ்வாறிருந்தது‘ எனச் சொல்லும் சொல்லும், ‘இவ்வாறிருக்கின்றது‘ என உணரும் உணர்வும் அற்றமை யால் உயிர் தன் பசுத்துவம் முற்றும் நீங்கி, அலையில்லாத நிலைநீர் போல அசைவற நிற்கும் சிவமாம் தன்மையை எம் குருநாதன் எமக்கு முற்றத்தந்து, நாத காரியமாகிய நால்வகை வாக்குக்களையும் கடந்த இயற்கை நிலையில் எம்மை இருக்கச் செய்தான்; அதனால் யாம் பேச்சற்று நிற்கின்றோம்.

# திருமந்திரம் - ஆறாம் தந்திரம் - 2. திருவடிப்பேறு

குரவன் உயிர்முச் சொரூபமும் கைக்கொண்

டரிய பொருள்முத் திரையாகக் கொண்டு

பெரிய பிரானடி பேர்நந்தி பேச்சற்

றருகிட என்னைஅங் குய்யக்கொண் டானே. 5

# திருமந்திரம் - ஆறாம் தந்திரம் - 2. திருவடிப்பேறு

சிவகுரவன் உயிர்களுக்கு உள்ள மூன்று இயல்புகளையும் தான் கைக்கொண்டு, அவன் காட்டிய சின்முத்திரையையே அறியத் தகும் அரிய பொருளாக யான் கொண்டு, 'நந்தி' என்னும் பெயருடைய பெரிய பெருமானாகிய சிவனது திருவடிக்கண் உள்ளம் உருகும்படி என்னை அப்போழுதே உய்யக்கொண்டருளினான்.

# திருமந்திரம் - ஆறாம் தந்திரம் - 2. திருவடிப்பேறு

பேச்சற்ற இன்பத்துப் பேரானநந் தத்திலே

மாச்சற்ற என்னைச் சிவமாக்கி மாள்வித்துக்

காச்சற்ற சோதிக் கடன்மூன்றும் கைக்கொண்டு

வாச்ச புகழ்மாளத் தாள்தந்து மன்னுமே. 6

# திருமந்திரம் - ஆறாம் தந்திரம் - 2. திருவடிப்பேறு

குற்றம் அற்ற அறிவுருவனாகிய சிவகுரவன் மல பரிபாகம் வாய்க்கப் பெற்ற என்னைத் தன் திருவடியைச் சூட்டி, மலம் காரணமாக எனக்கு நியதியாக வந்து பொருந்திய ‘கேவலம், சகலம், சுத்தம்‘ என்னும் மூன்று நிலைகளும் இனி நிகழாவாறு தான் கைக்கொண்டு சிவமாகச் செய்து, பேச்சற்றதும், எல்லையில்லாததுமாகிய இன்பத்திலே என்னையே யான் அறியாதபடி மூழ்குவித்து, அதனால் எனக்கு வருகின்ற புகழையும் யான் எண்ணாதபடி என்னோடு உடன் இருந்து அருளுகின்றான்.

# திருமந்திரம் - ஆறாம் தந்திரம் - 2. திருவடிப்பேறு

இதயத்தும் நாட்டத்தும் என்றன் சிரத்தும்

பதிவித்த பாதப் பராபரன் நந்தி

கதிவைத்த வாறும்மெய் காட்டிய வாறும்

விதிவைத்த வாறும் விளம்பஒண் ணாதே. 7

# திருமந்திரம் - ஆறாம் தந்திரம் - 2. திருவடிப்பேறு

சிவன் குருவாகி வந்து, தனது திருவடிகளை எனது இதயத்திலும், கண்ணிலும், மனத்திலும் நீங்காது பொருந்தியிருக்கச் செய்து, அதனானே ஞானத்தை உணர்த்திய வகையும், அந்த ஞானத் தினால் மெய்ப்பொருளைத் தலைப்படுவித்த வகையையும், பின் அம் மெய்ப்பொருளை நீங்காதிருத்தற்குரிய முறைகளை உணர்த்திய வகையும் யான் சொல்லும் தரத்தன அல்ல.

# திருமந்திரம் - ஆறாம் தந்திரம் - 2. திருவடிப்பேறு

திருவடி வைத்தென் சிரத்தருள் நோக்கிப்

பெருவடி வைத்தந்த பேர்நந்தி தன்னைக்

குருவடி விற்கண்ட கோனைஎங் கோவைக்

கருவடி யற்றிடக் கண்டுகொண் டேனே. 8

# திருமந்திரம் - ஆறாம் தந்திரம் - 2. திருவடிப்பேறு

எனது சென்னிமேல் தனது திருவடிகளைச்சூட்டி, அருளே எனக்கு வடிவாம்படிப்பார்த்து, அதனால், பின்பு பரம் பொருளை யான் பெறும்படி தந்தவரும், குருவடிவில் பலராலும் காணப்பட்ட ஞானத்தலைவரும், எங்கள் தலைவரும் ஆகிய நந்தி பெருமானை நான் எனது பிறவியின் வேர் அற்றொழியுமாறு அடைந்தேன்.

# திருமந்திரம் - ஆறாம் தந்திரம் - 2. திருவடிப்பேறு

திருவடி ஞானம் சிவமாக்கு விக்கும்

திருவடி ஞானம் சிவலோகம் சேர்க்கும்

திருவடி ஞானம் சிறைமலம் நீக்கும்

திருவடி ஞானமே திண்சித்தி முத்தியே. 9

# திருமந்திரம் - ஆறாம் தந்திரம் - 2. திருவடிப்பேறு

‘திருவடி ஞானம்‘‘ நான்கையும் இரட்டுற மொழிந் து, ‘திருவடியால் விளைந்த ஞானம், திருவடியால் விளங்கிய ஞானம்‘ என உரைத்துக் கொள்க. முதற் பொருளில் திருவடியும், இரண்டாவது பொருளில் திருவடி திருவருளும் ஆம். மூன்றாம் அடியில், ‘மீட்கும்‘ என்பது பாடமாயின், ‘மலமாகிய சிறையினின்றும் மீட்கும்‘ என உரைக்க. இப்பொருட்டு, ‘மலச் சிறை‘ என்பது பின் முன்னாய் நின்றது என்க. திண் சித்தி - அழியாப் பேறு. முத்தி தருவதனை ‘‘முத்தி‘‘ எனப் பாற்பகுத்து ஓதினார். இதனால், திருவடி ஞானத்தது சிறப்புக் கூறப்பட்டது.

# திருமந்திரம் - ஆறாம் தந்திரம் - 2. திருவடிப்பேறு

மேல்வைத்த வாறுசெய் யாவிடின் மேல்வினை

மால்வைத்த சிந்தையை மாயம தாக்கிடும்

பால்வைத்த சென்னிப் படரொளி வானவன்

தாள்வைத்த வாறு தரிப்பித்த வாறே. 10

# திருமந்திரம் - ஆறாம் தந்திரம் - 2. திருவடிப்பேறு

எம் குரவர் எம் தலைமேல் தம் திருவடியைச் சூட்டிய அந்த முறைமையைச் செய்யாவிடில் அவர் அருள்செய்த பின்பும் வினைகள் தோன்றி, முன்பு மயங்கியிருந்த உள்ளத்தை மீளவும் அப்பழக்கம் பற்றி மயக்கம் உறச்செய்யும். அதனால், பிறை முடித்த, பேரொளி வடிவினனாகிய சிவபெருமான், குருவாகி வந்து தனது திருவடியைச் சென்னி மேல் வைத்துததுபோலச் சிந்தையிலும் நீங்காது தங்குவித்தான்.

# திருமந்திரம் - ஆறாம் தந்திரம் - 2. திருவடிப்பேறு

கழலார் கமலத் திருவடி யென்னும்

நிழல்சேரப் பெற்றேன் நெடுமால் அறியா

அழல்சேரும் அங்கியுள் ஆழிப் பிரானும்

குழல்சேரும் என்னுயிர்க் கூடும் குலைத்தே. 11

# திருமந்திரம் - ஆறாம் தந்திரம் - 2. திருவடிப்பேறு

வெற்றியையுடையனவும், தாமரை மலர்போல் வனவும் ஆகிய குருவின் திருவடி என்னும் நிழலை யான் அடையப் பெற்றேன். அதனால், நெடியோனாகிய மாயோனாலும் அறியப்படாதவனும், ஓங்கி வளர்கின்ற வேள்வித் தீயில் விளங்குபவனுமாகிய சிவபிரான், எனது உயிர்க் கூடாகிய உடம்பின் தன்மையையும் மாற்றி, எனது இதயத் தாமரையில் எழுந்தருளி விளங்குகின்றான்.

# திருமந்திரம் - ஆறாம் தந்திரம் - 2. திருவடிப்பேறு

முடிமன்ன ராய்மூ வுலகம தாள்வர்

அடிமன்னர் இன்பத் தளவில்லை கேட்கின்

முடிமன்ன ராய்நின்ற மூவர்கள் ஈசன்

குடிமன்ன ராய்க்குற்ற மற்றுநின் றாரே. 12

# திருமந்திரம் - ஆறாம் தந்திரம் - 2. திருவடிப்பேறு

ஆராயுமிடத்து, சிவனது திருவடியில் அறிவால் நிலைத்திருப்பவர் இந்நிலவுலகத்தில் மூவுலகையும் ஆளும் மன் னராய் இருந்து யாவர்க்கும் பெருந்தலைவராய் உள்ள மும்மூர்த்திகள் தாமும் சிவனது ஏவலைச் செய்யும் சிற்றரசராய் நின்றே குற்றம் அற்று விளங்குகின்றனர். அதனால், சிவனடியைச் சேர்ந்தவர் அடையும் இன்பத்திற்கு அளவில்லை.

# திருமந்திரம் - ஆறாம் தந்திரம் - 2. திருவடிப்பேறு

வைத்தேன் அடிகள் மனத்தினுள் ளேநான்

பொய்த்தே எரியும் புலன்வழி போகாமல்

எய்த்தேன் உழலும் இருவினை மாற்றிட்டு

மெய்த்தேன் அறிந்தேன்அவ் வேதத்தின் அந்தமே. 13

# திருமந்திரம் - ஆறாம் தந்திரம் - 2. திருவடிப்பேறு

என்னை, மயக்குவனவாயும் கொடியனவாயும் உள்ள ஐம்பொறி களின் வழிப்போகாமல், என் மனத்துள்ளே சிவனது திருவடிகளை வைத்தேன். அதனால், இணைத்து உழலுதற்கு ஏதுவாகிய இரு வினைகள் என்னும் புதரை அழித்து வேதமாகிய மரத்தின் உச்சிக் கொம்பில் உள்ள மெய்ப் பொருளாகிய தேனை அறிவினால் அடைந்து இன்புறுகின்றேன்.

# திருமந்திரம் - ஆறாம் தந்திரம் - 2. திருவடிப்பேறு

அடிசார லாம்அண்ணல் பாத மிரண்டும்

முடிசார வைத்தனர் முன்னை முனிவர்

படிசார்ந்த இன்பப் பழவடி வெள்ளக்

குடிசார் நெறிகூடி நிற்பவர் கொள்கையே. 14

# திருமந்திரம் - ஆறாம் தந்திரம் - 2. திருவடிப்பேறு

முற்காலத்து ஞானிகள் பலரும் இறைவன் திரு வடியை அடையவேண்டியே குருவின் திருவடியைத் தம் தலையில் வைத்து அங்ஙனம் நலம் பெற்றனர். அதனால், உலக இன்பத்தையே தருவதாகிய இந்தப் பழைய பௌதிக உடம்பை இகழ்ந்து ஒதுக்கும் அந்த உயர்ந்தோர் கூட்டத்தை யடைதற்குரிய நெறியைப் பற்றினவர்களது கொள்கையும் இதுவே.

# திருமந்திரம் - ஆறாம் தந்திரம் - 2. திருவடிப்பேறு

மந்திர மாவதும் மாமருந் தாவதும்

தந்திர மாவதும் தானங்க ளாவதும்

சுந்தர மாவதும் தூய்நெறி யாவதும்

எந்தை பிரான்றன் இணையடி தானே. 15

# திருமந்திரம் - ஆறாம் தந்திரம் - 2. திருவடிப்பேறு

தந்திரம் - நூல். "தானம்" என்றது அறத்தை. சுந்தரம் - அழகு. உடல் அழகும் ஒருபேறே என்பதை அது பேறுகள் பதினாறனுள் ஒன்றாகக் கூறப்படுதலோடு, "திருவாக்கும் செய்கருமம் கைகூட்டும்"1 என்பதனுள், "உருவாக்கும்" என்பதும் கூறப்பட்டமையான் அறிக. "ஆவது" என்பன பலவும் ஒற்றுமை பற்றி வந்த ஒருமை.

இறுதி நான்கு மந்திரங்களாலும், இவ்வதிகாரத்தில் 'திருவடி எனப்பட்ட பொதுமையால் சிவனது திருவடிப் பேற்றினது சிறப்புக் கூறி முடிக்கப்பட்டது.

# காரைக்காலம்மையார்

சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருத்தொண்டத் தொகையில் ‘பேயார்’ எனக் குறிக்கப்படுபவர் இவ்வம்மையார். இவர் தாம் அருளிச் செய்த பிரபந்தங்களாகிய மூத்த திருப்பதிகங்களின் திருக்கடைக் காப்புக்களிலும் அற்புதத் திருவந்தாதியின் இறுதிச் செய்யுளிலும் ‘காரைக்கால் பேய்’ என உரைப்பதால் இவர் தம் ஊர் காரைக்கால் என்பதும் பேய் வடிவம் வேண்டிப் பெற்றபின் பாடியன ஆதலால் தன்னைப் பேய் எனக் குறித்துரைத்துள்ளார் என்பதும் அறியமுடிகிறது.



# காரைக்காலம்மையார்

காரைக்காலில் வணிகர் குலத்தில் தனதத்தன் என்பவருக்குப் புதல்வியாய் திருமகள் போன்ற பேரழகோடு அம்மையார் தோன்றினார். பெற்றோர் புனிதவதி எனப் பெயரிட்டு அன்போடு வளர்த்து வந்தனர். புனிதவதியார் பிறந்து மொழி பயிலும் காலத்திலேயே சிவபெருமான் திருவடிகளுக்குத் தொண்டு பூண்டு, சிவன் அடியார்களைக் கண்டால் சிவன் எனவே தெரிந்து வழிபடும் திறம் வாய்க்கப் பெற்றவராய் வளர்ந்து திருமணப் பருவம் அடைந்தார்.



# காரைக்காலம்மையார்

நாகப்பட்டினத்தில் வாழ்ந்த நிதிபதி என்ற வணிகன் தன் மகன் பரமதத்தனுக்குப் புனிதவதியாரை மணம் செய்விக்க விரும்பி முதியோர் சிலரைத் தனதத்தன்பால் அனுப்பினான். இருமுது குரவர் இசைவினால் புனிதவதியார்க்கும் பரமதத்தனுக்கும் திருமணம் நிகழ்ந்தது. தனதத்தன் தனக்கு வேறு பிள்ளைப்பேறு இல்லாமையால் காரைக்காலிலேயே தன் மருகன் பொன் வாணிபம் புரியவும் தனியே மனையறம் நடத்தவும் வகை செய்து கொடுத்தான்.



# காரைக்காலம்மையார்

மாய மாங்கனியின் விளைவாக அம்மையார் இல்வாழ்வில் திருப்பம் ஏற்பட்டது. பரமதத்தன் புனிதவதியாரைப் பிரிந்து பொருள்தேட அயலகம் சென்று மீண்டு மதுரையில் குடியேறி மற்றொரு பெண்ணைத் திருமணம் செய்து வாழத் தொடங்கினான்.



# காரைக்காலம்மையார்

அம்மனைவிக்குப் பிறந்த பெண் குழந்தைக்குத் தான் தெய்வமென மதிக்கும் புனிதவதியாரின் பெயரைச்சூட்டி மகிழ்ந்துறைந்தான். இதனை அறிந்த புனிதவதியாரின் சுற்றத்தினர் அம்மையாரை அவர் தம் கணவர்பால் சேர்ப்பிக்கும் கருத்துடன் அவரைப் பல்லக்கில் ஏற்றிக்கொண்டு பாண்டி நாடடைந்து அவன் வாழும் ஊர் எல்லையை அணுகினார்கள்.



# காரைக்காலம்மையார்

அவர்கள் வருகையை அறிந்த பரமதத்தன், அச்சம் உடையவனாய், இரண்டாவதாகத் தான் மணந்த மனைவியோடும் மகளோடும் புறப்பட்டு ஊர் எல்லையை அடைந்தான். அவன் வருகையை அறிந்த உறவினர் பல்லக்கை நிறுத்தினர்.



# காரைக்காலம்மையார்

பரமதத்தன் அம்மையாரிடம் ‘அடியேன் உம் அருளால் வாழ்கிறேன். இவ்விளங் குழவிக்கு உமது பெயரையே சூட்டியுள்ளேன்‘ என்று கூறி அவருடைய திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான். அதனைக் கண்ட புனிதவதியார் அச்சத்தோடு சுற்றத்தார் பால் ஒதுங்கி நின்றார். சுற்றத்தினர் பரமதத்தனை நோக்கி ‘நீ உன் மனைவியை வணங்கக் காரணம் யாது‘ எனக் கேட்க அவன் அவர்களை நோக்கி ‘ இவர் நம் போன்றவர் அல்லர் தெய்வத்தன்மை வாய்ந்தவர் நீவிரும் இவரை வழிபடுவீராக‘ என்றான்.



# காரைக்காலம்மையார்

புனிதவதியார் சிவபிரான் திருவடிகளைச் சிந்தித்து ‘தன் கணவர் கருத்து இதுவாயின் அவர் பொருட்டு அமைந்த எனது தசைப்பொதியைக் கழித்து நீக்கி நின் திருவடிகளைப் போற்றி நிற்கும் கணங்களில் ஒன்றாகும் பேய் வடிவினை எனக்குத் தந்தருளுக’ என இறைவனை வேண்டி நின்றார். அந்நிலையில் பெருமான் அருளால் வானுலகும் மண்ணுலகும் போற்றும் பேய் வடிவம் அவருக்கு வாய்த்தது. சுற்றத்தவர் அஞ்சி அகன்றனர். புனிதவதியார் சிவனடியே சிந்திக்கும் சிவஞானம் உடையவராய் அற்புதத் திருஅந்தாதியால் இறைவனைப் போற்றினார்.



# காரைக்காலம்மையார்

திருஇரட்டை மணிமாலை என்ற சிறு பிரபந்தத்தையும் அருளி இறைவனைப் போற்றித் திருக்கயிலையில் சிவபிரானது திருவோலக் கத்தைக் காணும் பெருவிருப்புடன் வடதிசை நோக்கிப் புறப்பட்டு, திருக்கயிலை மால்வரையை அடைந்தார். சிவபிரான் எழுந்தருளிய கயிலைமலையைக் காலால் மிதித்தல் கூடாது எனக் கருதியவராய் தலையால் நடந்து மேல்ஏறிச் சென்று இறைவன் சந்நிதியை அடைந்தார்.



# காரைக்காலம்மையார்

இறைவனது திருவருள் நோக்கம் அம்மையார் மேற் பதிந்தது. அம்பிகை அம்மையாரின் அன்பின் திறங்கண்டு வியந்து இறைவனை நோக்கி ‘எம் பெருமானே? தலையினால் நம்மை நோக்கி நடந்துவரும் இப் பெண் யார்?‘ என வினவ பெருமான் ‘இவர் அன்பினால் நம்மைப் பேணும் அம்மையாவாள். பேய் வடிவம் நம்மை வேண்டிப் பெற்றனள்‘ எனக்கூறி ‘அம்மையே‘ என்னும் செம்மொழியால் அவரை அழைத்தருள ‘அப்பா‘ என்று சொல்லிக் கொண்டு இறைவனையும் இறைவியையும் வணங்கினார்.



# காரைக்காலம்மையார்

அம்மையார் கயிலைப் பெருமானிடம் விடைபெற்று தலையால் நடந்தே திருவாலங்காட்டினை அடைந்து அண்டமுற நின்றாடும் இறைவனது திருக்கோலத்தைக் கண்டு உளம் உருகி வழிபட்டு ‘கொங்கை திரங்கி‘, ‘எட்டி இலவம்‘ என்று தொடங்கும் திருப்பதிகங்களைப் பாடிப் போற்றி பெருமானது தூக்கிய திருவடி நிழற்கீழ் என்றும் நீங்காது வாழும் பெருவாழ்வு பெற்றார். பெரிய புராணத்தில் சேக்கிழார் பெருமான் இவ்வரலாற்றை அழகுற விரித்துரைத்துள்ளார்.



# திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம்

கொங்கை திரங்கி நரம்பெ ழுந்து குண்டுகண் வெண்பற் குழிவ யிற்றுப்

பங்கி சிவந்திரு பற்கள் நீண்டு பரடுயர் நீள்கணைக் காலோர் வெண்பேய்

தங்கி யலறி யுலறு காட்டில் தாழ்சடை எட்டுத் திசையும் வீசி

அங்கங் குளிர்ந்தன லாடும் எங்கள் அப்ப னிடந்திரு ஆலங் காடே. 1

# திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம்

திரங்கி – வற்றி. குண்டு – ஆழம். குழி வயிறு – ஒட்டிய வயிறு. பங்கி – தலை மயிர். பரடு – புறங்கால். உலறுதல் – பசியால் உடல்மெலிதல். சில வேளைகளில் மற்றைப் பேய்கள் எங்கேனும் போய்விட ஒரு பெண் பேய் தனித்து நின்று அலறுதலும் உண்டு என்க. அங்கம் – திருமேனி. அனல் ஆடுதல் – சுற்றிலும் நெருப்பு எரிய நடுவே நின்று ஆடுதல். ‘இவ்வாறு ஆடுபவன் அங்கம் குளிர்ந்திருத்தல் வியப்பு‘ என்றபடி.

# திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம்

கள்ளிக் கவட்டிடைக் காலை நீட்டிக் கடைக்கொள்ளி வாங்கி மசித்து மையை

விள்ள எழுதி வெடுவெ டென்ன நக்கு வெருண்டு விலங்கு பார்த்துத்

துள்ளிச் சுடலைச் சுடுபி ணத்தீச் சுட்டிய முற்றும் சுளிந்து பூழ்தி

அள்ளி அவிக்கநின் றாடும் எங்கள் அப்ப னிடம்திரு ஆலங்காடே. 2

# திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம்

கள்ளிக் கவடு – கள்ளி மரத்தின் கிளைகள். கடைக்கொள்ளி – எரிந்து முடிந்த கொள்ளிக் கட்டை. வாங்குதல் – எடுத்தல். மசித்தல் – மசிய அரைத்தல். ‘பேய்கள் கண்ணில் எழுதுகின்ற மை கரியே‘ என்றபடி. எனவே, ‘இவ்வாறு செய்வனவும் பெண் பேய்களே‘ என்பது விளங்கும். விள்ள – கண்ணினின்றும் வேறு தோன்ற. ‘வெடு, வெடு‘ என்பது சினக் குறிப்பு. எனவே, நகுதல் கோபச் சிரிப்பாயிற்று. (வெருளுதல், தம்மை வெருட்டும் பேய்கள் கடுந்தெய்வங்கள் முதலினவற்றை நினைத்து.) ‘விளக்காக‘ என ஆக்கம் வருவிக்க. விலங்காகப் பார்த்தல், நேரே பாராமல் வலமாகவும், இடமாகவும் திரும்பித் திரும்பிப் பார்த்தல். ‘பிணஞ்சுடு தீச் சுட்டிட‘ என்றபடி. சுளித்தல் – கோபித்தல். பூழ்தி – புழுதி. இது ‘பூழி‘ என்றும் வரும். அவித்தல், தன்னைச் சுட்ட தீயை.

# திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம்

வாகை விரிந்துவெள் ளெற்றொ லிப்ப மயங்கிருள் கூர்நடு நாளை ஆங்கே

கூகையொ டாண்டலை பாட ஆந்தை கோடதன் மேற்குதித் தோட வீசி

ஈகை படர்தொடர் கள்ளி நீழல் ஈமம் இடுசுடு காட்ட கத்தே

ஆகம் குளிர்ந்தன லாடும் எங்கள் அப்ப னிடம் திரு ஆலங் காடே. 3

# திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம்

வகை - காட்டு வாகை மரம். விரிந்து (விரிய) - தழைத்திருக்க. நெற்று வெண்மையாயது காய்ந்து போனமையால். மயங்கு இருள் - மாலைக் காலத்தில். பகலோடு வந்து பொருந்திய இருள். அது பின் மிகுதலின், 'கூர்' என்றார். நடு நாள் - நள்ளிரவு. 'நடு நாள் யாமத்தும் பகலும் துஞ்சான்'* எனப் புறப்பாட்டிலும் வந்தது. ஐ, சாரியை, ஆண்டலை, மனிதன் தலைபோலும் தலையை யுடைய ஒருவகைப் பறவை. கோடு - மரக்கிளை. கூகையும், ஆண்டலையும் கூவக் கேட்டு ஆந்தை மரக் கிளையின் மேல் இடம் பெயர்ந்து ஓடுகின்றது. வீசுதல் - எழுச்சியுறுதல். ஈகை - இண்டங் கொடி - 'ஈகை வீசிப் படர்கின்ற, தொடர் கள்ளியின் நீழலையுடைய சுடுகாடு' என்க. மற்றும், 'ஈமம் இடு சுடுகாடு' என்வும் கொள்க. ஈமம்- பிணஞ்சுடும் விறகு. 'கூகை முதலிய பறவைகளின் செயல் ஒருபாலாக, ஈமம் ஒருபால் இடப்படுகின்றது' எனக் கொள்க. 'ஆகம் குளிரந்து' என்பதற்கு, மேல், 'அரங்கம் குளிர்ந்து' என்றதற்கு உரைத்தது உரைக்க. ஆகம் - உடம்பு. 'நடு நாள் சுடுகாட்டகத்தே, பாட, ஓட ஆடும் எங்கள் அப்பன்' என இயைத்துக் கொள்க.

# திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம்

குண்டில்ஓ மக்குழிச் சோற்றை வாங்கிக் குறுநரி தின்ன அதனை முன்னே

கண்டிலோம் என்று கனன்று பேய்கள் கையடித் தொ டிடு காட ரங்கா

மண்டலம் நின்றங் குளாளம் இட்டு, வாதித்து, வீசி எடுத்த பாதம்

அண்டம் உறநிமிர்ந் தாடும் எங்கள் அப்ப னிடம்திரு ஆலங் காடே. 4

# திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம்

குண்டில் ஓமக் குழி – ஆழத்தை உடைய ஓம குண்டம். இது சுடுகாட்டில் இறுதிக் கடனுக்காகச் செய்யப்படுவது. ‘வாங்கி‘ என்றது, ‘யாவரும் போகட விட்டுப் போனபின்பு எடுத்து‘ என்றதாம். முன்பு கண்டிலோம் – முன்பே பார்க்கவில்லையே. (பார்த்திருந்தால் நரிகளை வெருட்டித் தின்றிருக்கலாமே என்று) மண்டபம் – வட்டமாகச் சென்று ஆடுதல். உள்ளாலம், ‘ஆளத்தி‘ எனப்படும். அஃதாவது குரலால் இசை கூட்டுதல். வாதித்து – காளியோடும் வாதம் புரிந்து ‘எடுத்த பாதம்‘ என்க. எடுத்த பாதத்தை அண்டம் உற நிமிர்த்து ஆடினமையால், காளி நாணம் அடைந்து தோற்றாள். ‘நிமிர்ந்து‘ என்பதும் பாடம்.

# திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம்

விழுது நிணத்தை விழுங்கி யிட்டு, வெண்தலை மாலை விரவப் பூட்டிக்

கழுதுதன் பிள்ளையைக் காளி யென்று பேரிட்டுச் சீருடைத் தாவளர்த்துப்

புழதி துடைத்து, முலைகொ டுத்துப் போயின தாயை வரவு காணா

தழுதுறங் கும்புறங் காட்டில் ஆடும் அப்ப னிடம்திரு ஆலங் கா டே 5

# திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம்

கழுது - பேய். விழுது நிணம் - திரட்டி எடுத்த உருண்டையாகிய கொழுப்பு. ‘கழுது தன் பிள்ளையை, நிணத்தை விழுங்க நிணம் - திரட்டி எடுத்து உருண்டையாகிய கொழுப்பு.

‘கழுது தன் பிள்ளையை, நிறத்தை விழுங்க இட்டு, வெண் தலை மாலை பூட்டி, புழதி துடைத்து, முலைகொடுத்து, - காளி - என்று பேர் இட்டுச் சீருடைத்தா வளர்த்து, (சிறிது நேரம் விட்டுப்) போயினதாக, அத்தாயை வரவிற் காணாது, பிள்ளைப் பேய் அழுது, பின் உறங்கும் புறங் காடு‘ என இயைத்துக்கொள்க. ‘போயினதாக‘ எனவும், ‘அத்தாய்‘ எனச் சுட்டும் வருவித்துக்கொள்க. ‘விழுங்கியிட்டு‘ என்பது பாடம் அன்று.

# திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம்

பட்டடி நெட்டுகிர்ப் பாறு காற்பேய் பருந்தொடு, கூகை, பகண்டை , ஆந்தை

குட்டி யிட, முட்டை, கூகைப் பேய்கள் குறுநரி சென்றணங் காடு காட்டில்

பிட்டடித் துப்புறங் காட்டில் இட்ட பிணத்தினைப் பேரப் புரட்டி ஆங்கே

அட்டமே பாயநின் றாடும் எங்கள் அப்ப னிடம்திரு ஆலங் காடே. 6

# திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம்

அணங்கு ஆடு காட்டில் கூகைப் பேய்களும், குறு நரிகளும், குட்டியை ஈன, பருந்தும், கூகையும், பகண்டையும், ஆந்தையும் முட்டையிட, பாறுகாற் பேய்கள் சென்று அவைகளைப் பிட்டு வீசிப் பின் புறங்காட்டில் இடப்பட்ட பிணத்தைப் புரளப் புரட்டி, நெடுக்கும், குறுக்குமாகப் பாயமந்து ஓட ஆடும் எங்கள் அப்பன்' என இயைக்க. பட்ட அடி – பரந்துபட்ட பாதம். அகரம் தொகுத்தல். நெட்டுகிர் – நீண்ட நகம். பாறுதல் – வற்றுதல். பகண்டை ஒருவகைப் பறவை. கூகைப் பேய்கள், பேய்களில் கூகையாய் உள்ள பேய்கள் அணங்கு, தாக்கணங்குகள் (தீத்தெய்வங்கள்) அட்டம் – குறுக்கு.

# திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம்

கழலும் அழல்விழிக் கொள்ளி வாய்ப்பேய் சூழ்ந்து துணங்கையிட் டோடி, ஆடித்

தழலுள் எரியும் பிணத்தை வாங்கித் தான் தடி தின்றணங் காடு காட்டில்

கழலொலி, ஓசைச் சிலம்பொ லிப்பக் காலுயர் வட்டணை யிட்டு நட்டம்

அழலுமிழ்ந் தோரி கதிக்க ஆடும் அப்ப னிடம்திரு ஆலங் காடே. 7

# திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம்

துணங்கை – இரு கைகளையும் மடக்கி இரு விலாக்களிலும் அடித்துக் கொண்டு ஆடும் கூத்து. இது பெரு மகிழ்ச்சியை வெளிப்படுத்துகின்ற ஒன்று. தடி – தசை. அணங்கு ஆடுதல் – தெய்வம் வந்ததுபோல ஆடுதல். ‘காட்டில், ஓரி கதிக்க, கால் வட்டணையிட்டு நட்டம் ஆடும் அப்பன்‘ என்க. ஓரி – நரி. கதிக்க – குதிக்க (நட்டம்) அழல் உமிழ்தல், வெப்பத்தை வீசுதல். ‘உமிழ்ந்து‘ என்பதை, ‘உமிழ‘ எனத் திரித்துக் கொள்க.

# திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம்

நாடும், நகரும் திரிந்து சென்று, நன்னெறி நாடி நயந்தவரை

மூடி முதுபிணத் திட்ட மாடே, முன்னிய பேய்க்கணம் சூழச் சூழக்

காடும், கடலும், மலையும், மண்ணும், விண்ணும் சுழல அனல்கையேந்தி

ஆடும் அரவப் புயங்கன் எங்கள் அப்ப னிடம்திரு ஆலங் காடே. 8

# திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம்

நயத்தல் - விரும்புதல். ‘பிணம்‘ என்றது, பிணமான நிலையை, ‘பிணத்து மூடி‘ என மாற்றி, ‘பிணமாய்விட்ட நிலையில் அவர்களைத் துணியால் மூடி மறைத்து‘ என உரைக்க. மாடு - பக்கம்; இடம் ‘பிணத்தை இட்ட இடம்‘ என்றதனால் அது, ‘முதுகாடு‘ என்றதாயிற்று. ‘இட்ட மாடே ஆடும் ‘புயங்கன்‘ என இயைக்க, முன்னிய - பலவற்றைக் கருதிய. அரவப் புயங்கன் - பாம்பையணிந்த கூத்தன். ‘புயங்கம்‘ என்பது ஒருவகைக் கூத்தா யினும், அஃது இங்குப் பொதுப் பொருளே தந்தது;

# திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம்

துத்தம், கைக்கிள்ளை, விளரி, தாரம், உழை, இளி ஓசைபண் கெழுமப் பாடிச்

சச்சரி, கொக்கரை, தக்கை யோடு, தகுணிதம் துந்துபி தாளம் வீணை

மத்தளம் கரடிகை வன்கை மென்தோல் தமருகம், குடமுழா, மொந்தை வாசித்

தத்தனை விரவினோ டாடும் எங்கள் அப்ப னிடம்திரு ஆலங் காடே. 9

# திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம்

‘ஓசை‘ என்றதனை, ‘குரல்‘ எனக் கூறியதாகக் கொண்டு, ‘துத்தம்‘ முதலிய ஏழும் ஏழிசைகளின் பெயர் என உணர். இந்த ஏழிசைகளையும் தக்கபடி கூட்டுமாற்றால் பண்கள் பிறக்கும் ஆதலின், இவைகளை, ‘பண் கெழுமப் பாடி‘ என்றார். கெழும – பொருந்த. சச்சரி முதல் மொந்தை ஈறாகக் கூறப்பட்டவை வாத்திய வகைகள். ‘கைக்கிளை‘ என்பது விரித்தல் விகாரம் பெற்றது. வன் கை மென்தோல் தமருகம் – வலிய இரு பக்கங்களிலும் மெல்லிய தோலையுடைய உடுக்கை. அத்தனை விரவினோடு, ‘அத்தனை வாத்தியங்களின் ஒத்திசையோடு ஓத்து நிகழ ஆடும் எங்கள் அப்பன்‘ என்க. ‘சச்சரி‘ இன எதுகை ‘வாசித்து‘ என்பதனை, ‘வாசிக்க‘ எனத்திரிக்க. இதன்கண் அம்மையார் இசைக் கலையின் சிறப்புக்களைப் புலப்படுத்தினமை காண்க. ‘புயங்கன்‘ முதலிய சொற்களால் பரதக் கலையைப் புலப்படுத்தி, ‘அனைத்துப் பரதங்களை யும் ஆடும் பெருமானே வல்லவன்‘ என்பதனைப் புலப்படுத்தலும் அம்மையாரது திருவுள்ளம் என்க.

# திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம்

புந்தி கலங்கி, மதிம யங்கி இறந்தவ ரைப்புறங் காட்டில் இட்டுச்

சந்தியில் வைத்துக் கடமை செய்து தக்கவர் இட்டசெந் தீவி ளக்கா

முந்தி அமரர் முழவி னோசை திசைகது வச்சிலம் பார்க்க ஆர்க்க,

அந்தியின் மாநடம் ஆடும் எங்கள் அப்ப னிடம்திரு ஆலங் காடே. 10

# திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம்

புந்தி – புத்தி, மதி – அறிவு. ‘கலங்கி, மயங்கி‘ என்றது, இறப்பு வருங்காலத்து நிகழ்வனவற்றைக் கூறியவாறு. சந்தி, உறவினர் நண்பர்களது கூட்டம். கடமை, ஈமக் கடன், தக்கவர், செய்ய உரிமையுடையவர்; புதல்வர் முதலானோர். தீ, பிணத்திற்கு இட்ட தீ. ‘அதுவே விறகாய் இருக்க ஆடுகின்றான்‘ என்க. அவ்வாட்டத்தை மக்கள் காணார் ஆகலான், அதற்கு அமரர்களே வாத்தியம் வாசிப்பாராவர். முழவு – மத்தளம், திசை கதுவ – திசைகளை உள்ளடக்கி நிகழ. அந்தி, மாலைக் காலம், மா நடம், நெடிது நிகழும் நடனம்.

# அலகு - 3

நம்மாழ்வார் – முதற்பத்து – நான்காம் திருவாய்மொழி – ‘அம்சிறைய மடநாராய்’ பாசுரம் (10 பாடல்கள்) – பெரியாழ்வார் – முதற்பத்து – மூன்றாம் திருமொழி – ‘மாணிக்கம் கட்டி வயிரம் இடைக்கட்டி’ பாசுரம் (10 பாடல்கள்) ஆண்டாள் – நாச்சியார் திருமொழி – ஒன்பதாம் திருமொழி – திருமாலிருஞ்சோலை – ‘சிந்துரச் செம்பொடிபோல்’ பாசுரம் (10 பாடல்கள்)– குலசேகராழ்வார் – பெருமாள் திருமொழி – ஐந்தாம் திருமொழி – வித்துவக் கோட்டு அம்மானை வேண்டுதல் ‘தருதுயாம் தடாயேல்’ பாசுரம் (10 பாடல்கள்)

# நம்மாழ்வார்



வைணவ நெறியைப் பின்பற்றிப் பக்தியில் சிறந்து விளங்கிய பன்னிரு ஆழ்வார்களுள் ஒருவராகிய நம்மாழ்வார் என்னும் மாறன் சடகோபன் தமிழ்நாட்டின் ஆழ்வார் திருநகரில் பிறந்தார். நான்கு வேதங்களையும் தீந்தமிழில் பாடியதால் "வேதம் தமிழ் செய்த மாறன்" என்றும் புகழ்ப்படுகிறார். கம்பர் இயற்றிய "சடகோபர் அந்தாதி" எனும் நூலின் தலைவனும் இவரேயாவார்.

# நம்மாழ்வார்



திருக்குருகூர் என்னும் ஊரில் பொற்காரியார் மற்றும் சேர நாட்டு திருவெண்பரிசாரத்தை ஆண்ட மன்னனின் மகளான உடைய நங்கைக்குத் திருமகனாராக நம்மாழ்வார் கலி பிறந்த 43-ஆவது நாளில் அவதரித்தார். இவர் பாண்டிய மரபினர் ஆதலால் மாறன் என்ற இயற்பெயரைப் பெற்றவர். "சட" எனும் நாடியை வென்றதால் "சடகோபன்" என்றும் மாறன் சடகோபன் என அழைக்கப்பட்டார். யானையை அடக்கும் அங்குசம் போலப் பரன் ஆகிய திருமாலைத் தன் அன்பினால் கட்டியமையால் "பராங்குசன்" என்றும், தலைவியாகத் தன்னை வரித்துக் கொண்டு பாடும்போது "பராங்குசநாயகி" என்றும் அழைக்கப்படுகிறார்

# நம்மாழ்வார்



நம்மாழ்வார் இயற்றிய பாசுர நூல்கள் நான்கு: திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி திருவாய்மொழி இவை ரிக், யசுர், அதர்வண மற்றும் சாம வேதத்தின் சாரமாக அமைந்திருப்பதாகப் பெரியோர்கள் சொல்வார்கள். இந்தத் திருவாய்மொழியில் 1102 பாசுரங்களும், திருவிருத்தம் நூலில் 100 பாசுரங்களும், திருவாசிரியம் நூலில் 8 பாசுரங்களும் பெரிய திருவந்தாதி நூலில் 87 பாசுரங்களும் என நான்கு பிரபந்தங்களில் ஆயிரத்து இருநூற்றுத் தொண்ணூற்றாறு பாசுரங்களை இசைத்துள்ளார்.

# முதற்பத்து – நான்காம் திருவாய்மொழி

**அஞ்சிறைய மடநாராய் அளியத்தாய், நீயும்நின்**

**அஞ்சிறைய சேவலுமாய் ஆவாவென் றெனக்கருளி,**

**வெஞ்சிறைப்புள் ளுயர்த்தாற்கென் விடுதூதாய்ச் சென்றக்கால்,**

**வன்சிறையில் அவன்வைக்கில் வைப்புண்டா லென்செய்யுமோ?** 1

அழகிய சிறகுகளையும் மடப்பத்தையுமுடைய நாரையே, அருளோடு கூடின நீயும், அழகிய சிறகுகளையுடைய நினதுசேவலுமாகி, ‘அந்தோ!’ என்று இரங்கி எனக்கு அருள் செய்து கொடிய சிறகுகளையுடைய புள்ளாகிய கருடனைக் கொடியிலே உயர்த்திய இறைவனிடத்தில் யான் விடுகின்ற தூதாகிச் சென்றால், உங்கள் முகம் பார்த்துக் கேளாமையாகிற கொடிய சிறையிலே அவன் வைத்தால், அவ்விருப்புக்கு நீங்கள் இசைந்திருப்பின் உங்களுக்கு அது என்ன குற்றத்தைச் செய்யும்?’ என்கிறாள்.

# முதற்பத்து – நான்காம் திருவாய்மொழி

என் செய்ய தாமரைக்கண்* பெருமானார்க்கு என் தூதாய்*
என் செய்யும் உரைத்தக்கால்?*இனக் குயில்காள் நீர் அலிரே?*
முன் செய்த முழுவினையால்* திருவடிக்கீழ்க் குற்றேவல்*
முன் செய்ய முயலாதேன்* அகல்வதுவோ? விதியினமே. 2

கூட்டமாக இருக்கின்ற குயில்காள்! நீங்கள் அல்லீரோ? என்னுடைய செந்தாமரை மலர் போன்ற திருக்கண்களையுடைய பெருமானிடத்தில் எனக்குத் தூதாகிச் சென்று, நான் கூறுவதனைக் கூறின் குற்றம் யாது உண்டாம்? முற்பிறவிகளிற் செய்த நிறைந்த பாவங்களால் திருவடிகளில் அண்மையிலிருந்து செய்யுந் தொண்டுகளைச் செய்வதற்கு முற்பிறவியிலேயே முயலாத யான் இன்னமும் அகன்று போமதுவோ முறை?’.

# முதற்பத்து – நான்காம் திருவாய்மொழி

**விதியினால் பெடை மணக்கும்* மென்நடைய அன்னங்காள்!***
**மதியினால் குறள் மாணாய்* உலகு இரந்த கள்வர்க்கு***
**மதியிலேன் வல் வினையே* மாளாதோ? என்று ஒருத்தி***
**மதி எல்லாம் உள் கலங்கி* மயங்குமால் என்னீரே!** 3

நல்வினையினால் பெண் அன்னங்களைச் சேர்ந்திருக்கிற மெல்லிய நடையினையுடைய அன்னங்காள், அறிவினால் குறுகிய வடிவையுடைய பிரமசாரியாகி உலகத்தினை யாசித்த வஞ்சனையுடையவருக்கு, ‘ஒரு பெண்ணானவள் அறிவில்லாத தன்னுடைய கொடிய வினைகள்தாம் அழியாதனவோ என்று கூறி, அறிவு எல்லாம் அடியோடு கலங்கி மயங்காநின்றாள்’ என்று கூறுங்கள்.

# முதற்பத்து – நான்காம் திருவாய்மொழி

என் நீர்மை கண்டு இரங்கி* இது தகாது என்னாத*
என் நீல முகில் வண்ணற்கு* என் சொல்லி யான் சொல்லுகேனோ?*
நன் நீர்மை இனி அவர்கண்* தங்காது என்று ஒரு வாய்ச்சொல்*
நன் நீல மகன்றில்காள்!* நல்குதிரோ? நல்கீரோ! 4

‘நல்ல நீல நிறத்தினையுடைய மகன்றில் என்னும் பறவைகளே, எனது தன்மையைக் கண்டிருந்தும், இரங்கி, பிரிந்து தங்கி இருத்தல் தகாதது என்று நினையாத, என்னுடைய நீல முகில் போன்ற நிறத்தினையுடைய தலைவர்க்கு என்ன வார்த்தையினைச் சொல்லி நான் சொல்லப் போகிறேன்? நல்ல உயிரானது இனி அத்தலைவரின் பொருட்டு அவளிடத்தில் தங்கியிராது என்று ஒருவார்த்தை சொல்லுதலைச் செயவீர்களா மாட்டீர்களா?’ என்கிறாள்.

# முதற்பத்து – நான்காம் திருவாய்மொழி

நல்கித் தான் காத்து அளிக்கும்* பொழில் ஏழும்; வினையேற்கே*
நல்கத் தான் ஆகாதோ?* நாரணனைக் கண்டக்கால்*
மல்கு நீர்ப் புனல் படப்பை* இரை தேர் வண் சிறு குருகே!*
மல்கு நீர்க் கண்ணேற்கு* ஓர் வாசகம் கொண்டு அருளாயே 5

'நல்ல நீல நிறத்தினையுடைய மகன்றில் என்னும் பறவைகளே, எனது தன்மையைக் கண்டிருந்தும், இரங்கி, பிரிந்து தங்கி இருத்தல் தகாதது என்று நினையாத, என்னுடைய நீல முகில் போன்ற நிறத்தினையுடைய தலைவர்க்கு என்ன வார்த்தையினைச் சொல்லி நான் சொல்லப் போகிறேன்? நல்ல உயிரானது இனி அத்தலைவரின் பொருட்டு அவளிடத்தில் தங்கியிராது என்று ஒருவார்த்தை சொல்லுதலைச் செயவீர்களா மாட்டீர்களா?' என்கிறாள்.

# முதற்பத்து – நான்காம் திருவாய்மொழி

**அருளாத நீர் அருளி* அவர் ஆவி துவராமுன்***
**அருள் ஆழிப் புட்கடவீர்* அவர் வீதி ஒருநாள் என்று***
**அருள் ஆழி அம்மானைக்* கண்டக்கால் இது சொல்லி***
**அருள் ஆழி வரி வண்டே!* யாமும் என் பிழைத்தோமே?** 6

வட்டமான வரிகளையுடைய வண்டே! அருட்கடலான எம்பெருமானைக் கண்டால், ‘அருள் செய்யாத நீர் திருவருள் புரிந்து, தலைவியினுடைய உயிர் உலர்வதற்கு முன்னர், அருட்கடலான கருடப்பறவையினை அவர் வீதியில் ஒரு நாள் மட்டும் செலுத்துவீர்’ என்று இவ்வார்த்தைகளைச் சொல்லியருள்; வாராத தாமேயன்றி, யாமும் எக்குற்றத்தைச் செய்தோம்?

# முதற்பத்து – நான்காம் திருவாய்மொழி

**என்பு இழை கோப்பது போலப்*  பனி வாடை ஈர்கின்றது***
**என் பிழையே நினைந்தருளி*  அருளாத திருமாலார்க்கு***
**என் பிழைத்தாள் திருவடியின்*  தகவினுக்கு என்று ஒரு வாய்ச்சொல்***
**என்பிழைக்கும்? இளங் கிளியே!*  யான் வளர்த்த நீ அலையே?** 7

எலும்பினைச் செதுக்குகின்ற இளமை பொருந்திய கிளியே, எலும்பினைத் தொளைத்து அத்தொளையில் நூலினிழையைக் கோத்தலைப் போன்று, குளிர்ந்த வாடைக்காற்று அறுக்கிறது; என் குற்றங்களையே நினைந்து அருள் செய்யாத திருமகள் கேள்வனிடத்தில் சென்று, ‘சுவாமியான உம்முடைய பொறுமைக்கு என்ன குற்றத்தைச் செய்தாள்?’ என்று ஒரு வார்த்தை சொல்லல் வேண்டும்; நான் வளர்த்த நீ அல்லையோ?

# முதற்பத்து – நான்காம் திருவாய்மொழி

**நீயலையே? சிறு பூவாய்!* நெடுமாலார்க்கு என் தூதாய்***
**நோய் எனது நுவல் என்ன,* நுவலாதே இருந்தொழிந்தாய்***
**சாயலொடு மணி மாமை* தளர்ந்தேன் நான்* இனி உனது–**
**வாய் அலகில் இன் அடிசில்* வைப்பாரை நாடாயே.** 8

‘சிறிய நாகணவாய்ப் பறவையே, அடியரானார்க்கு இரங்கும் பெரும்பித்தரான தலைவர்க்கு என் தூதாகிச் சென்று, என் நோயினைச் சொல்வாய் என்று யான் கூறவும், கூறாமல் இருந்துவிட்டாய்; அதனால், காரியத்தைக் கெடுத்தது நீ அன்றோ? இப்பொழுது, யான் சாயலும் அழகிய மாமை நிறமும் நீங்கப் பெற்றேன்; இனிமேல் உனது வாயலகில் இனிய உணவினை ஊட்ட வல்லவர்களைத் தேடிக் கொள்வாய்,’ என்றவாறு.

# முதற்பத்து – நான்காம் திருவாய்மொழி

**நாடாத மலர் நாடி* நாள்தோறும் நாரணன் தன்***
**வாடாத மலர் அடிக்கீழ்* வைக்கவே வகுக்கின்று***
**வீடாடி வீற்றிருத்தல்* வினை அற்றது என் செய்வதோ?***
**ஊடாடு பனி வாடாய்!* உரைத்து ஈராய் எனது உடலே** 9

நடுவே திரிகிற குளிர்ந்த வாடைக்காற்றே, தேடுதற்கு அரிய பூக்களைத் தேடிக் கொணர்ந்து, நாடோறும் நாராயணனுடைய வாடுதல் இல்லாத மலர் போன்ற திருவடிகளில் வைத்து வணங்குவதற்காகவே அவன் இவ்வுயிர்களைப் படைத்தான்; அவ்வாறு இருக்க, ‘பிரிவிலே நிலைத்துத் தனியே தங்கியிருத்தலாகிற நல்வினையற்ற காரியம் என்ன பயனைச் செய்வதோ?’ என்று அவனுக்குக் கூறி, தக்க மறுமொழி இல்லையாகில் மீண்டு வந்து எனது உடலை அறுக்கக் கடவாய்,’ என்கிறாள்.

# முதற்பத்து – நான்காம் திருவாய்மொழி

**உடல் ஆழிப் பிறப்பு வீடு* உயிர் முதலா முற்றுமாய்க்***
**கடல் ஆழி நீர் தோற்றி* அதனுள்ளே கண்வளரும்***
**அடல் ஆழி அம்மானைக்* கண்டக்கால் இது சொல்லி***
**விடல் ஆழி மட நெஞ்சே!* வினையோம் ஒன்றாம் அளவே** 10

ஆழ்ந்ததாய், சுவாதீனமாக உள்ள மனமே, உடலினுடைய வட்டமான பிறப்பு, அவ்வவ்வுடல்களில் தங்கியிருக்கின்ற உயிர்கள் முதலாகவுள்ள எல்லாவற்றையும் உண்டாக்குவதற்காக ஆழ்ந்துள்ளதான நீரையுடைய கடலை உண்டாக்கி, அக்கடல் நடுவண் யோகநித்திரை செய்கிற, பகைவரைக் கொல்லுகிற சக்கரத்தையுடைய இறைவனைக் கண்டால், இதனைச் சொல்லி, வினையினையுடைய நாம் அவனோடு சேருமளவும் அவனை விடாதேகொள்,’ என்கிறாள்.

# பெரியாழ்வார்



வில்லிபுத்தூரில் விஷ்ணுசித்தர் என்னும் இயற்பெயரோடு கருடனின் அம்சமாகத் தோன்றியவர் பெரியாழ்வார். இவர் இயல்பாகவே எம்பெருமானிடம் பக்தி மிக்கவர். கண்ணன் கம்சனின் திருமாலாகாரரிடம் பூக்களை இரந்து அவற்றை சூடி மகிழ்ந்த நிகழ்வால் கவரப் பெற்றார். எனவே மாலை கட்டி சாத்துவதே அவனுக்கு உகந்தது என முடிவெடுத்து அதன்படி நந்தவனம் உண்டாக்கி மாலை கட்டி அதைப் பெருமானுக்குச் சாத்தி மகிழ்ந்தார்.

# பெரியாழ்வார்



தன் வேத விற்பன்னத்தால் பொற்கிழி பெற்றார். அவரது பெருமையைப் போற்றி மன்னனும், நம்பியும், மற்றுள்ள ஆன்றோரும், மக்களும் அவரைப் பணிந்தனர். மன்னன் இவருக்கு ‘பட்டர்பிரான்’ என்று விருது கொடுத்து யானை மேலேற்றி ‘வேதப்பயன் கொள்ள வல்ல மெய்நாவன் வந்தான்’ என்ற ஊர் முழுவதும் அறிவிக்கச் செய்தான்.

# பெரியாழ்வார்



இக்காட்சியை மக்கள் கண்டிருந்தபோது திருமாலும் கருடன்மீதேறி காட்சி தந்தார். மக்கள் அனைவரும் கண்டு போற்றினர். இதனால் திருமாலுக்குக் கண்ணேறு வந்து விடுமோ என்று அஞ்சிய நம்மாழ்வார் தான் அமர்ந்திருந்த யானையின் கழுத்து மணியைத் தாளமாகக் கொண்டு, “பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிர மாண்டு பலகோடி நூறாயிரம்” என வாழ்த்தி திருப்பல்லாண்டு பாடி அருளினார். மன்னன் மற்றுள்ள பக்தர்களையும் தன்னோடு பாடச்செய்தார்.

# பெரியாழ்வார்



தன் மனத்துக்கினிய அவதாரமான கண்ண பிரானின் பிறப்பு, வளர்ப்பு, ஆனிரை மேய்த்தல், தீராத விளையாட்டுக்கள் மற்றும் பக்தர்களைக் காக்கும் அவன் பேரருட் குணங்களை பெரியாழ்வார் திருமொழி எனும் திவ்ய பிரபந்தமாக உலகம் உய்யப் பாடி அருளினார்.

# முதற்பத்து – மூன்றாம் திருமொழி

மாணிக்கம் கட்டி* வயிரம் இடை கட்டி*
ஆணிப் பொன்னால் செய்த* வண்ணச் சிறுத்தொட்டில்*
பேணி உனக்குப்* பிரமன் விடுதந்தான்*
மாணிக் குறளனே தாலேலோ*
வையம் அளந்தானே தாலேலோ 1

மாணிக்கங்களை இருபுறமும் கட்டி இடையில் வயிரங்களைக் கட்டி மாற்றில்லாத ஆணிப்பொன்னால் செய்த அழகிய சிறிய தொட்டிலை மிகவும் விருப்பமுடன் பிரமன் உனக்காகத் தந்தான்! உன்னுடைய உடைமைகளை இரந்து பெறுவதற்காக குள்ள மாணவனாக வந்த கண்ணனே தாலேலோ! உன்னுடைமைகளான மூவுலகங்களையும் பெற்ற மகிழ்ச்சியில் திரிவிக்கிரமனாக வளர்ந்து உலகங்களை எல்லாம் அளந்தவனே தாலேலோ!

# முதற்பத்து – மூன்றாம் திருமொழி

**உடையார் கனமணியோடு* ஒண் மாதுளம்பூ***
**இடை விரவிக் கோத்த* எழிற் தெழ்கினோடும்***
**விடை ஏறு காபாலி* ஈசன் விடுதந்தான்***
**உடையாய்! அழேல் அழேல் தாலேலோ***
**உலகம் அளந்தானே! தாலேலோ** 2

உன் இடுப்பின் அழகிற்கு ஏற்ற அழகிய ஒலி எழுப்பும் பொன்மணிகளோடு அழகிய பொன் மாதுளம்பூ இடையிடையே விரவிக் கோத்த அரைஞாணை, காளை வாகனம் ஏறும் மண்டையோடு ஏந்தியதால் காபாலி என்று பெயர் உடைய ஈசன் அனுப்பிவைத்தான். எம்மை உடைய தலைவனே அழாதே அழாதே தாலேலோ! உலகம் அளந்தவனே தாலேலோ!

# முதற்பத்து – மூன்றாம் திருமொழி

என்தம்பிரானார்* எழிற் திருமார்வற்குச்*
சந்தம் அழகிய* தாமரைத் தாளற்கு*
இந்திரன் தானும்* எழில் உடைக் கிண்கிணி*
தந்து உவனாய் நின்றான் தாலேலோ*
தாமரைக் கண்ணனே! தாலேலோ 3

என் தலைவனான அழகிய திருமார்பை உடைய, மணமும் விரிவும் நிறமும் அழகிய தாமரையைப் போல் உள்ள திருவடிகளை உடைய உனக்கு மூவுலகங்களுக்கும் தலைவனான இந்திரனும் அழகினை நிலையாக உடைய கிண்கிணியைத் தந்து உன் பெருமையை எண்ணி விலகி நிற்காமலும் உன் எளிமையை எண்ணி அணுகி நிற்காமலும் தகுந்த தொலைவில் உவனாக நின்றான் தாலேலோ! தாமரைக்கண்ணனே தாலேலோ!

# முதற்பத்து – மூன்றாம் திருமொழி

சங்கின் வலம்புரியும்* சேவடிக் கிண்கிணியும்*
அங்கைச் சரிவளையும்* நாணும் அரைத்தொடரும்*
அங்கண் விசும்பில்* அமரர்கள் போத்தந்தார்*
செங்கண் கருமுகிலே! தாலேலோ*
தேவகி சிங்கமே! தாலேலோ 4

விரிந்து பரந்த விண்ணுலகத்தில் வாழும் தேவர்களால் தொழப்படும் பெருமை பெற்ற, சிவந்த தாமரை போன்ற திருக்கண்களைப் பெற்று சிறந்த ஆண்மகன் – புருஷோத்தமன் – என்று பெயர் பெற்ற திருமாலே ஆனாலும் ஆகட்டும், தனது கையில் கொடுப்பதற்கு ஒரு பொருளும் இல்லாதவரை கொய்து முகரத் தகுந்த இளந்தளிர் போன்ற மேனியை உடைய மகளிர் தம் கைகளால் வணங்கி விடை கொடுத்து அனுப்புவார்கள்!.பொது மகளிருக்கு எத்தகுதியும் பொருட்டில்லை; பொருளுடையவன் என்பது ஒன்றே தகுதி என்று வலியுறுத்துகிறது இந்தப் பாடல்.

# முதற்பத்து – மூன்றாம் திருமொழி

எழில் ஆர் திருமார்வுக்கு* ஏற்கும் இவை என்று*
அழகிய ஐம்படையும்* ஆரமும் கொண்டு*
வழு இல் கொடையான்* வயிச்சிரவணன்*
தொழுது உவனாய் நின்றான் தாலேலோ*
தூமணி வண்ணனே தாலேலோ 5

வடிவான உன் மார்புக்கு ஏற்றவை என்று அழகிய ஐந்தாயுதத்தை (பெருமாளின் அடையாளங்களான சங்கு, எஃகம், வாள், தண்டு, வில் ஆகியவையே ஐந்தாயுதம்) அருமையான சங்கிலியில் கோர்த்துக் கொணர்ந்த குற்றமற்ற கொடையாளனான குபேரன் உன்னைத் தொழுது உன் அருகிலேயே நிற்கின்றான் தூய மணியின் நிறங்கொண்டவனே கண்ணுறங்கு..

# முதற்பத்து – மூன்றாம் திருமொழி

ஓதக் கடலின்* ஒளிமுத்தின் ஆரமும்*
சாதிப் பவளமும்* சந்தச் சரிவளையும்*
மா தக்க என்று* வருணன் விடுதந்தான்*
சோதிச் சுடர் முடியாய்! தாலேலோ*
சுந்தரத் தோளனே! தாலேலோ 6

ஒலி எழுப்பும் கடலின் ஒளி பொருந்திய முத்தால் ஆன ஆரமும் உயர் வகைப் பவளமும் வண்ணச் சரிகையும் உனக்குச் சிறப்பானது என்று மழைக் கடவுள் தந்தனுப்பி இருக்கிறான் அழகிய தோள்கள் ஏந்தும் புகழ் வீசும் முடியுடையவனே கண்ணுறங்கு.

# முதற்பத்து – மூன்றாம் திருமொழி

கானார் நறுந்துழாய்* கைசெய்த கண்ணியும்*
வானார் செழுஞ்சோலைக்* கற்பகத்தின் வாசிகையும்*
தேனார் மலர்மேல்* திருமங்கை போத்தந்தாள்*
கோனே! அழேல் அழேல் தாலேலோ*
குடந்தைக் கிடந்தானே! தாலேலோ 7

நறுமணம் நிறைந்த நல்ல துளசியைக் கையால் கண்ணி தொடுத்து வானின் செழுமை மிகுந்த சோலையிலிருக்கும் கற்பகத் தருவின் பூக்களால் நெருக்கித் தொடுத்த மாலையை தேன் நிறைந்த மலர் மேல் வைத்துத் திருமகள் அனுப்பி இருக்கிறாள். குடந்தையில் படுத்தவாறு இருக்கும் தலைவனே அழாது கண்ணுறங்கு.

# முதற்பத்து – மூன்றாம் திருமொழி

கச்சொடு பொற்சுரிகை* காம்பு கனகவளை*
உச்சி மணிச்சுட்டி* ஒண்தாள் நிரைப் பொற்பூ*
அச்சுதனுக்கு என்று* அவனியாள் போத்தந்தாள்*
நச்சுமுலை உண்டாய்! தாலேலோ*
நாராயணா! அழேல் தாலேலோ 8

இடுப்புக் கச்சையோடு, தங்கத்தாலான குறுவாள், பட்டாடை, தோளில் அணியும் வளை இவற்றோடு நெற்றியில் அணிய மணி ஆடும் சுட்டியும், ஒப்பற்றத் திருவடிகளுக்கு பொன்னாலான பூவும் அச்சுதன் என்றழைக்கப் படும் உனக்காக நிலமகள் அனுப்பி இருக்கிறாள் இங்கன ஏன் அச்சுதன் பேர் குறிப்பிடுறார் ஆழ்வார்? அச்சுதன் என்ற பெயரின் விளக்கத்தில் பொருள் புரியுமோ? பூதகியின் நச்சுப்பால் உண்ட நாராயணனே அழாது கண்ணுறங்கு.

# முதற்பத்து – மூன்றாம் திருமொழி

மெய் திமிரும் நானப்* பொடியொடு மஞ்சளும்*
செய்ய தடங்கண்ணுக்கு* அஞ்சனமும் சிந்துரமும்*
வெய்ய கலைப்பாகி* கொண்டு உவளாய் நின்றாள்*
ஐயா! அழேல் அழேல் தாலேலோ*
அரங்கத்து அணையானே! தாலேலோ 9

உன் நறுமணக் குளியலுக்கு நாற்றப் பொடியும், மஞ்சளும் செய்து, குளித்த பின் பெரிய கருவிழிகளில் பூச மையும், நெற்றியில் இட சிந்துரமும் விரையும் கலைமானை ஊர்தியாகக் கொண்ட காளி (அ) துர்க்கை உனக்குத் துணையாக இருக்கின்றாள் அரங்கத்தில் பள்ளி கொண்ட அய்யனே அழாது கண்ணுறங்கு.

# முதற்பத்து – மூன்றாம் திருமொழி

வஞ்சனையால் வந்த பேய்ச்சி முலை உண்ட
அஞ்சன வண்ணனை ஆய்ச்சி தாலாட்டிய
செஞ்சொல் மறையவர் சேர் புதுவைப் பட்டன் சொல்
எஞ்சாமை வல்லவர்க்கு இல்லை இடர்தானே 10

கண்ணபிரானைத் தொட்டிலிற் கண்வளர்த்தித் தாலாட்டாக யசோதைப்பிராட்டி அன்று சொன்ன பாசுரங்களை உட்கொண்டு நான் இத்திருமொழி பாடினேன்; இதை நன்றாகக் கற்பவர்கள் ஒருவகைத் துன்பமுமடையாமல் நித்யாநிந்தம் பெறுவரென்று இத்திருமொழி கற்றார்க்குப் பலன் சொல்லித் தலைக்கட்டினாராயிற்று. தாலாட்டிய என்றது விசேஷணமன்று. இறந்தகாலப் பலவின்பால் வினையாலணையும் பெயர். இரண்டாம் வேற்றுமையுருபும் பயனுமுடன்தொக்க தொகை.

# ஆண்டாள்



பெரியாழ்வார் என்கிற விஷ்ணு சித்தர் நந்தவனத்திலே துளசிச் செடியின் கீழே கொத்திக்கொண்டிருக்கும்போது ஒரு அழகிய பெண் குழந்தை அவருக்குக் கிடைத்தது. அவரும் அக்குழந்தையை தன் மகளாகவே கருதி "கோதை" என்று பெயரிட்டு மிகுந்த பாசத்தோடு வளர்த்து வந்தார். கோதை, நாய்ச்சியார் என்றும் சூடிக் கொடுத்த சுடர்க்கொடி என்றும் அழைக்கப்பட்டாள்.

# ஆண்டாள்



விஷ்ணு சித்தர் கோதைக்கு திருமாலின் பெருமையும் வைணவ அறமும் சொல்லி வளர்த்தார். ஆண்டாளும் திருமால்மீதுஆழ்ந்த பக்தியும் காதலும் கொண்டாள். விஷ்ணு சித்தர் வீட்டில் இல்லாது நேரத்தில் தன்னை அலங்கரித்துக் கொண்டு ஆழ்வார் எம்பெருமானுக்கு கட்டிய மாலையைச் சூடுவாள். கண்ணாடி முன் நின்று தன் மாலை சூடிய தோற்றம் கண்டு "நான் அவனுக்கு இணையோ? இல்லையோ?" என்று எண்ணி நிற்பாள். இணை என்று ஒருநாள் மகிழ்வாள். இல்லை என்று தன்னை இன்னும் அழகு படுத்திக் கொள்வாள். விஷ்ணு சித்தர் வரும் முன் மாலையைக கழற்றி மீண்டும் பந்தாகச் சுருட்டி வைப்பாள். இப்படி பல நாள் நடந்தது.

# ஆண்டாள்



ஒரு நாள் விஷ்ணு சித்தர் கோதையை சூடிய மாலையோடு பார்க்க நேர்ந்தது. எம்பிரான் மாலையை நீ சூடலாமா?” என்று கோபத்துடன் கேட்டார். அவர் அன்று அம்மாலையை எம்பிரானுக்குச் சாத்தவில்லை. அன்றிரவு எம்பெருமான் ஆழ்வார் கனவில் தோன்றி “இன்று நமக்கு மாலை சாத்தாதது ஏன்?” என்றார். ஆழ்வார் தன் மகள் அதைச் சூடிய தவறைச் சொல்லி மன்னிக்க வேண்டினார். இறைவனோ “அவள் சூடிய மாலையே நல்ல மணமுடையதும் நம் விருப்பத்திற்கு உகந்ததும் ஆகும்” என அறிவித்தார். பெரியாழ்வார் அன்று முதல் ஆண்டாளைப் பூமிப் பிராட்டியாகவே கருதலானார். சூடிக் கொடுத்த நாய்ச்சியாரும் மார்கழி நீராடி, மாதவனை எண்ணி நோன்பு நோற்று, திருப்பாவை, நாய்ச்சியார் திருமொழி ஆகிய பிரபந்தங்களைப் பாடி அருளினார்.

# ஆண்டாள்



மணப்பருவம் எய்திய மகள் ”மானிடவர்க் கென்று பேச்சுப்படில் வாழ்கில்லேன்” என்றும் ”மற்றவர்க்கு என்னைப் பேசலொட்டேன் மாலிருஞ் சோலை எம் மாயற்கல்லால்” என்றும் கூறுவதைக் கேட்டு மனம் வருந்தினார் விஷ்ணு சித்தர். ஒருவாறு மனதைத் தேற்றிக் கொண்டு “நூற்றியெட்டுத் திருப்பதிகளிலே வாழும் எம்பிரான்களில் எவரை மணக்க விரும்புகிறாய்?” என மகளிடம் கேட்டார்.

# ஆண்டாள்



அவர்கள் குணநலன்களைக் கூறுமாறு ஆண்டாள் கேட்டுக் கொண்டாள். அதற்கு இணங்கிய ஆழ்வார் வில்லிப்புத்தூரில் தொடங்கி பாண்டி மண்டலம், தொண்டை மண்டலம், மலைநாடு, சோழநாடு, வட திசைத் திருப்பதிகளில் உறையும் எம்பிரான்கள் மற்றும் திருவேங்கடவன், அழகர், திருவரங்கன் ஆகியோரது பெருமைகளை விரிவாக கூறினார். இவற்றுள் அரங்கத்துறையும் அழகிய மணவாளனின் கண்ணழகு குழலழகு ஆகியவற்றால் கவரப்பட்ட கோதை அவரையே தன் மணாளராக வரித்து அம் மைத்துனன் நம்பி மதுசூதனன் வந்து கைத்தலம் பற்றும் கனாக் காணலானாள்.

# ஆண்டாள்



ஆழ்வாரும் அரங்கத்து எம்மானே தன் மகளுக்கேற்ற மணவாளன் என ஒப்பினாலும் இது எப்படி நடக்கும் என்ற கவலையில் ஆழ்ந்தார். அரங்கத்து எம்மான் அவர் கனவில் தோன்றி “கோதையை திருவரங்கத்துத் திருமுற்றத்துக்கு அழைத்து வருக. அங்கே தக்க முறையில் அவள் கைத்தலம் பற்றுவோம்.” என்று சொல்ல மன மகிழ்ச்சியுற்றார்.

# ஆண்டாள்



ஒருநாள் அரங்கத்துக் கோயில் பரிவாரம் முற்றும் எம்பிரானின் சத்திரம் சாமரம் போன்ற வரிசைகளோடு வில்லிபுத்தூர் வந்து பெரியாழ்வரைப் பணிந்து ஆண்டாளை அழைத்து வர அரங்கன் பணித்ததாகச் சொன்னார்கள். ஆழ்வாரும் அகமகிழ்ந்து வட பெருங் கோயில் உடையானை வணங்கி அரங்கம் செல்ல அவன் அனுமதி பெற்றார். ஆழ்வாரும் அவர் அணுக்கர்களும் ஆண்டாளை பட்டுத் திரையிட்ட பல்லக்கில் ஏற்றி பல்வகை இசைக்கருவிகள் இசைத்து “சூடிக் கொடுத்த சுடர்க்கொடி வந்தாள் சுரும்பார்க் குழற்கோதை வந்தாள். திருப்பாவை பாடிய செல்வி வந்தாள். தென்னரங்கனைத் தொழும் தேசியள் வந்தாள்.” ஆகிய முழக்கங்களோடு அழகிய மணவாளன் திருமண்டபத்தை அடைந்தனர்.

# ஆண்டாள்



அங்கே பாண்டிய மன்னன் வல்லபதேவன் போன்ற சீடர்களும் கோவிற் பரிவாரமும் பார்த்திருக்க பல்லக்கின் திரைச்சீலையை ஆழ்வார் திறந்தார். ஆண்டாள் தட்டுச் சேலையணிந்து, பருத்த செங்கழுநீர் மாலை சூடி, சீரார் வளையொளிக்க, சிலம்புகள் ஆர்க்க, அன்ன நடையிட்டு அரங்கன் பால் சென்று நின்றாள். அவனைக் கண்களாரக் கண்டு அவன் அரவணைமீது கால் மிதித்தேறி அவனடி சேர்ந்தாள். அங்கிருந்த அனைவரும் வியக்க மறைந்து போனாள்.

# நாச்சியார் திருமொழி – ஒன்பதாம் திருமொழி

சிந்துரச் செம்பொடிப் போல்* திருமாலிருஞ்சோலை எங்கும்*
இந்திர கோபங்களே* எழுந்தும் பரந்திட்டனவால்*
மந்தரம் நாட்டி அன்று* மதுரக் கொழுஞ்சாறு கொண்ட*
சுந்தரத்தோளுடையான்* சுழலையினின்று உய்துங் கொலோ! 1

மழைக்காலத்திலே பட்டுப்பூச்சிகள் விசேஷமாகப் பறக்கும், அவை காதலனுடைய அதரத்தின் பழுப்புக்கு ஸ்மாரகங்களாய் இருக்குமாதலால் தலைவிக்கு உத்தீபகமாயிருக்கும். ஐயோ! திருமாலிருஞ்சோலைப் புறமெங்கும் பட்டுப்பூச்சி மயமாய்விட்டதே, விச்லேஷகாலத்திலே இவை வந்துதோற்றினால் இனி உயர்தரிக்க வழியுண்டேவென்று வருந்துகின்றாள். எம்பெருமானுடைய வடிவுக்குப் போலியான திருமலைக் கண்ணாலே ஸேவித்துக்கொண்டிருந்தாகிலும் ஒருவாறு தரித்திருப்போமென்று பார்த்தால் அதற்கும் ஆசையில்லாதபடி பாழும் பட்டுப்பூச்சிகள் அம்மலைச் சூழ்ந்து கொண்டு மறைக்கின்றனவே!

# நாச்சியார் திருமொழி – ஒன்பதாம் திருமொழி

**போர்க்களிறு பொரும்* மாலிருஞ்சோலை அம் பூம்புறவில்***
**தார்க்கொடி முல்லைகளும்* தவள நகை காட்டுகின்ற***
**கார்க்கொள் பிடாக்கள் நின்று* கழறிச் சிரிக்கத் தரியேன்***
**ஆர்க்கு இடுகோ? தோழீ!* அவன் தார் செய்த பூசலையே*.** 2

யானைகள் கரைபொருது விளையாடா நிற்கப்பெற்ற திருமாலிருஞ்சோலை மலைச்சாரல்களில் அரும்புகொண்டு விளங்குகின்ற கொடி முல்லைகளானவை, அவ்வெம்பெருமான் ஸம்போக ஆரம்ப ஸமயத்திற் பண்ணும் புன்முறுவலை நினைப்பூட்டிக்கொண்டு என்னைத் துன்பப்படுத்தாநின்றன. அதற்குமேலே, படாக்களானவை புஷ்பித்து, ஸம்ஸ்லேஷம் நடந்தேறின பின்பு ஒரு தலையில் வெற்றிக்கு ஈடாகப்பண்ணும் பெருஞ்சிரிப்பை நினைப்பூட்டாநின்றுகொண்டு என்னை உருவழிக்கின்றன. தோழீ! அவ்வெம்பெருமான் திருத்தோளில் சாத்திக் கொண்டிராநின்ற மாலையை ஆசைப்பட்டமையாலன்றோ நான் இப்படிப்பரிபவப்பட நேர்ந்தது! இந்தபரிபவத்தை நான் யாரிடத்திற்சென்று முறையிட்டு ஆறுவேன் என்கிறாள். புறவு – சோலைகள் நிரம்பிய ஆராமம். தவளம் – யவனா என்றவடசொல் விகாரம். காட்டுகின்ற – வினைமுற்று. படாக்கள் – பெருங்கொடிகள் கார்க்கொள்ளுகை – அழகுகொண்டிருக்கையுமாம்.

# நாச்சியார் திருமொழி – ஒன்பதாம் திருமொழி

**போர்க்களிறு பொரும்* மாலிருஞ்சோலை அம் பூம்புறவில்***
**தார்க்கொடி முல்லைகளும்* தவள நகை காட்டுகின்ற***
**கார்க்கொள் பிடாக்கள் நின்று* கழறிச் சிரிக்கத் தரியேன்***
**ஆர்க்கு இடுகோ? தோழீ!* அவன் தார் செய்த பூசலையே*.** 3

யானைகள் கரைபொருது விளையாடா நிற்கப்பெற்ற திருமாலிருஞ்சோலை மலைச்சாரல்களில் அரும்புகொண்டு விளங்குகின்ற கொடி முல்லைகளானவை, அவ்வெம்பெருமான் ஸம்போக ஆரம்ப ஸமயத்திற் பண்ணும் புன்முறுவலை நினைப்பூட்டிக்கொண்டு என்னைத் துன்பப்படுத்தாநின்றன. அதற்குமேலே, படாக்களானவை புஷ்பித்து, ஸம்ஸ்லேஷம் நடந்தேறின பின்பு ஒரு தலையில் வெற்றிக்கு ஈடாகப்பண்ணும் பெருஞ்சிரிப்பை நினைப்பூட்டாநின்றுகொண்டு என்னை உருவழிக்கின்றன. தோழீ! அவ்வெம்பெருமான் திருத்தோளில் சாத்திக் கொண்டிராநின்ற மாலையை ஆசைப்பட்டமையாலன்றோ நான் இப்படிப்பரிபவப்பட நேர்ந்தது! இந்தபரிபவத்தை நான் யாரிடத்திற்சென்று முறையிட்டு ஆறுவேன் என்கிறாள். புறவு – சோலைகள் நிரம்பிய ஆராமம். தவளம் – யவனா என்றவடசொல் விகாரம். காட்டுகின்ற – வினைமுற்று. படாக்கள் – பெருங்கொடிகள் கார்க்கொள்ளுகை – அழகுகொண்டிருக்கையுமாம்.

# நாச்சியார் திருமொழி – ஒன்பதாம் திருமொழி

கருவிளை ஒண்மலர்காள்!* காயா மலர்காள்*

திருமால் உரு ஒளி காட்டுகின்றீர்* எனக்கு உய் வழக்கு ஒன்று உரையீர்*

திரு விளையாடு திண் தோள்* திருமாலிருஞ்சோலை நம்பி*

வரிவளை இற் புகுந்து* வந்திபற்றும் வழக்கு உளதே* 4

மழைகாலத்தில், கருவிளைப்பூக்களென்கிற காக்கணம் பூக்களும் காயாம் பூக்களும் விசேஷமாகப் புஷ்பிக்குமாதலாலும், அவை எம்பெருமானுடைய திருமேனிநிறத்தோடொத்த நிறத்தையுடையனவாயிருக்கு மாதலாலும் அவற்றின்காட்சி தனக்கு விரஹதசையில் உத்தீபகமாயிருப்பது பற்றி உண்டாகும் வருத்தத்தை அம்மலர்களை விளித்தே உரைக்கின்றாள். எம்பெருமானுடைய திருநிறத்தை நினைப்பூட்டா நின்று கருவிளைப்பூக்களை! காயாம்பூக்களே! நீங்கள் என்னை முடிக்கும்வகை ஒன்றுமோதான் கற்றது? நான் பிழைக்கும்வகையை அறிவீர்களாகிற் சொல்லுங்கள் என்கிறாள் முன்னடிகளில். இங்ஙனம் யாசிக்கப்பட்ட அம்மலர்கள் ஆண்டாளைநோக்கி, 'நாங்கள் உமக்கு ஜீவநோபாயம்சொல்லவேண்டும்படி இப்போது உமக்குநேர்ந்த அநர்த்தம் என்ன?' என்று கேட்டனவாகக் கொண்டு, அவ்வநர்த்தத்தை முறையிடுகின்றான் பின்னடிகளில்; திருமாலிருஞ் சோலையில் அவாப்தஸமஸ்தகாமரா யெழுந்தருளியிருக்கிற பெரியவர், நானொருத்தி இருப்பதாகவும் நினையாமல் தமது திருத்தோளைப் பெரியபிராட்டியார்க்கு நித்யாநுபவயோக்யமாகக் கொடுத்து அவளும் தாமும் பரமரஸபுஞ்ஜமாய் அநுபவம் நடத்தா நிற்பதைப்பற்றி நான் ஒன்றும் விசாரப்படாமல், 'அவர் முன்புவிரும்பிப்போந்த வளைகள் நம்கையில் இருக்கின்றனவே. அவற்றைக் கண்டுகொண்டாவது தரித்திருப்போம்' என்றெண்ணி நான் என்வீட்டுக்குள்ளே கதவடைத்துக்கொண்டு கிடந்தால், அப்பெரியவர் அதனையும் பொறாமல் சடக்கென ஓடிவந்து என் வீட்டினுள் புகுந்து பலாத்காரமாக அவ்வளைகளைப் பறித்துக் கொண்டு ஓடினரே, இஃது எந்த நீதியிற்சேரும்? இதற்குமேற்பட எனக்கு வேறோர் அநர்த்தம் விளையவேண்டுமோ என்கிறாள்.

# நாச்சியார் திருமொழி – ஒன்பதாம் திருமொழி

**பைம்பொழில் வாழ் குயில்காள்! மயில்காள்!* ஒண் கருவிளைகாள்***

**வம்பக் களங்கனிகாள்!* வண்ணப் பூவை நறுமலர்காள்***

**ஐம் பெரும் பாதகர்காள்!* அணி மாலிருஞ்சோலை நின்ற***

**எம்பெருமானுடைய நிறம்* உங்களுக்கு என் செய்வதே?*** 6

குயில், மயில், கருவிளை, களங்கனி, காயாம்பூ என்னும் இவ்வைந்து வஸ்துக்களையும் பஞ்சமஹாபாதகிகள் என்கிறாள். பொற்களவு, கள்குடித்தல் முதலிய மஹத்தான ஐந்துபாதகஞ் செய்தவர்களைப் பஞ்சமஹாபாத்திகள் என்கிறாய்த்து. இவை தனக்குப் பொறுக்கவொண்ணாத ஹிம்ஸையைப் பண்ணுவதுபற்றி இங்ஙனம் கூறினளென்க. ‘‘பெரும்பர்தகர் – பெரியபாதகத்தைச் செய்பவர், பாதகம் – பாவம். அன்றி ‘‘பெரும்பாதகர்‘‘ என்று – பெரிய ஸாயகர் என்றபடியுமாம். (பொறுக்கமுடியாத வேதனையை உண்டுபண்ணுமவர்கள் என்கை.) இங்கு இரட்டுறமொழிதலாகக் கொள்க. பரமசோதனை எம்பெருமானோடு, அற்பசேதநங்களான குயில்மயில்களோடு, அசேதநங்களான கருவிளை முதலியவற்றோடு வாசியற எல்லாவஸ்துக்களும் எனக்குத் தீங்குவிளைக்க ஒருப்பட்டால் நான் எங்ஙனே பிழைக்கும்படி?; அவன் பிரிந்துபோன மையத்தில் முகங்காட்டி என்னைத் தேற்ற வேண்டியவைகளும் பாதகங்களானால் நான் எங்ஙனம் பிழைக்கவல்லேன்?; பிரிந்தவன் ஒருவனாய், பாதகங்கள் பலவானால் பிழைக்கமுடியுமோ? என்கிறாள் போலும்..

# நாச்சியார் திருமொழி – ஒன்பதாம் திருமொழி

**துங்க மலர்ப் பொழில் சூழ்* திருமாலிருஞ்சோலை நின்ற***
**செங்கண் கருமுகிலின்* திருவுருப் போல்***
**மலர்மேல் தொங்கிய வண்டினங்காள்!* தொகு பூஞ்சுனைகாள்!***
**சுனையிற் தங்கு செந்தாமரைகாள்!* எனக்கு ஓர் சரண் சாற்றுமினே*** 7

திருமாலிருஞ்சோலைமலைப் பொழில்களில் மலர்ந்துள்ள பூக்களில் தங்குகின்ற வண்டுகளும் சுனைகளும் அழகருடைய திருவுருவை நினைப்பூட்டி நலிவதனாலும், சுனைகளில் அலர்ந்த செந்தாமரை மலர்கள் அவருடைய திவ்யாவயவங்களுக்கு ஸ்மாரகங்களாய்க்கொண்டு ஹிம்ஸிப்பதனாலும் அந்த ஹிம்ஸையைப் பொறுக்கமாட்டாத ஆண்டாள் அவற்றை நோக்கி ‘அந்தோ! நான் உங்களுக்குத் தப்பிப் பிழைப்பதொரு உபாயம்சொல்ல வல்லீர்களோ?‘ என்கிறாள். துங்கம் – வடசொல். கருமுகில் – முற்றுவமை, ‘‘தாவிவையங்கொண்ட தடந்தாமரைகட்கே‘‘ என்றாற்போல.

# நாச்சியார் திருமொழி – ஒன்பதாம் திருமொழி

நாறு நறும் பொழில்* மாலிருஞ்சோலை நம்பிக்கு* நான்–
நூறு தடாவில் வெண்ணெய்* வாய்நேர்ந்து பராவி வைத்தேன்*
நூறு தடா நிறைந்த* அக்கார அடிசில் சொன்னேன்*
ஏறு திருவுடையான்* இன்று வந்து இவை கொள்ளுங் கொலோ!* 8

இப்பாட்டும் மேற்பாட்டும் இத்திருமொழியில் விலக்ஷணமாக அமைந்த பாசுரங்கள். கீழ்ச்சென்ற பாசுரங்களின் ஸைலியும் மேல்வரும் பாசுரங்களின் தீயமான அமைந்திருக்கிறபடியைக் காண்மின். கீழ்பாட்டில் “எனக்கோர் சரண் சாற்றுமினே“ என்றவாறே தளர்ந்து த்வயாநுஸந்தானம் பண்ணினாள், உத்தரகண்டத்தை நன்றாக அநுஸந்தித்தாள், அதற்கு அர்த்தாதகிய கைங்கரிய ப்ரார்த்தனையிலே ஊன்றினாள், காயிகமான கைங்கரிய மென்றும் செய்யமுடியாதபடி தளர்ந்திருக்கும் தசையாகையாலே வாசிகமான கைங்கரியம்செய்ய விரும்பினாள். அது செய்தபடியைச் சொல்லுகிறாள் இப்பாட்டில், இப்பாட்டுக்கு ஸேஷபூதம் மேற்பாட்டு. மணங்கமழாநின்ற சோலைகளாலே சூழப்பட்ட திருமாலிருஞ்சோலை மலையில் அவாப்த ஸமஸ்தகாமனாய் எழுந்தருளியிருக்கும் எம்பிரானுக்கு அடியேன் நூறுதடா நிறைந்த வெண்ணெயும் நூறுதடா நிறைந்த அக்காரவடிசிலும் வாசிகவுள்ளம் பற்றுவனா? என்கிறாள்.

# நாச்சியார் திருமொழி – ஒன்பதாம் திருமொழி

இன்று வந்து இத்தனையும்* அமுது செய்திடப் பெறில்* நான்–
ஒன்று நூறாயிரமாக் கொடுத்துப்* பின்னும் ஆளும் செய்வன்*
தென்றல் மணம் கமழும்* திருமாலிருஞ்சோலை தன்னுள் நின்றபிரான்
அடியேன் மனத்தே* வந்து நேர்படிலே* 9

இன்று வந்து இவை கொள்ளுங் கொலோ?‘‘ என்று (கீழ்ப்பாட்டில் மநோரதித்தபடியே திருமாலிருஞ்சோலையெம்பெருமான் இன்று இவ்விடமெழுந்தருளி, அடியேன் (வாவா) வாசா ஸமர்ப்பித்த நூறு தடா நிறைந்த வெண்ணெயையும் அக்காரவடிசிலையும் அமுதுசெய்தருள்வனாகில் இந்த மஹோபகாரத்துக்குக் கைம்மாறாக அடியேன் இன்னும் நூறாயிரம் தடாநிறைந்த வெண்ணெயும் அக்காரவடிசிலும் ஸமர்ப்பிப்பேன்; அவ்வெம்பெருமான் இங்கெழுந்தருளி இவற்றை அமுது செய்துவிட்டு மீண்டு போய்விடாமல் என் ஹ்ருதயத்திலேயே ஸ்தாவரப்ரதிஷ்டையாக இருந்துவிடும் பக்ஷத்தில் ‘‘ஒழிவில் காலமெல்லாமுடனாய் மன்னி வழுவிலாவடிமை செய்யவேண்டும் நாம்‘‘ என்று பெரியார் மநோரதித்த கைங்கரியங்கள் எல்லாவற்றையும் குறையறச் செய்திடுவேன் என்கிறாள். ‘‘தென்றல் மணங்கமழும் திருமாலிருஞ்சோலை தன்னுள் நின்றபிரான் இன்று வந்து இத்தனையும் அமுது செய்திடப்பெறில் நான் ஒன்று நூறாயிரமாக கொடுப்பேன், அடியேன் மனத்தே வந்து நேர்படில் பின்னுமாளுஞ் செய்வேன்‘‘ என்று யோஜிப்பது. ஒன்றுநூறாயிரமாகக் கொடுத்தலாவது – தான் ஸமர்ப்பித்த தடாக்களில் ஒரு தடாவை அமுது செய்தால் அதற்குக் கைம்மறாறாகப் பின்னும் நூறாயிரம் (லக்ஷம்) தடா ஸமர்ப்பித்தல். இப்படியே பார்த்துக்கொள்க. இதனால், ஆண்டாள் தனது பாரிப்பின் மிகுதியை வெளியிட்டபடி..

# நாச்சியார் திருமொழி – ஒன்பதாம் திருமொழி

**காலை எழுந்திருந்து* கரிய குருவிக் கணங்கள்***
**மாலின் வரவு சொல்லி* மருள் பாடுதல் மெய்ம்மைகொலோ***
**சோலைமலைப் பெருமான்* துவாராபதி எம்பெருமான்***
**ஆலின் இலைப் பெருமான்* அவன் வார்த்தை உரைக்கின்றதே*** 10

ஆண்டாள் பிறந்தவூரில் திர்யக்குக்களுங் கூட எம்பெருமானைப்பற்றின சிந்தனையே மிக்கிருக்கு மாதலால் சில கருங்குருவிகள் காலை யெழுந்திருந்து கூட்டங் கூட்டமாக இருந்து எம்பெருமானுடைய வரவை ஸூசிப்பித்துச் சொல்லுவதுமா யிருக்கவே, அதுகண்ட ஆண்டாள் இது மெய்யாய்த் தலைக்கட்டுமோ பொய்யாய்விடுமோவென்று சிந்திக்கிறாளாய்த்து. மெய்ம்மை கொலோ? என்றதற்கு இரண்டு வகையாகக் கருத்தாகலாம். நம்முடைய சித்தவிப்ரமத்தால் இவை பாடுகின்றனவாகத் தோற்றுகின்றதா? அல்லது மெய்கவே பாடுகின்றனவா? என்பது ஒரு கருத்து; இக்கரிய குருவிக்கணங்கள் இதற்கு முந்தியும் பலகால், மாலின் வரவுசொல்லி மருள்பாடியும் அவ்வெம்பெருமான் வரக்காணாமையினாலே இதுவரையில் இவற்றின் பாட்டு பொய்யாயொழிந்தது, இப்போதாவது அங்ஙனன்றி மெய்யாகத் தலைக்கட்டுமா; என்பது மற்றொரு கருத்து.



# குலசேகராழ்வார்

குலசேகர ஆழ்வார் சேர மன்னரும் சந்திர குலத்தவருமான திருடவிரதற்கு மகனாக, கொல்லி நகரில் பிறந்தார். இவர் ஸ்ரீகௌஸ்துபாம்ஸராய் கருதப் படுகிறார். இவர் தன் வீரம் மிகுந்த நால்வகைப் படையால் எதிரிகளை வென்று புறம் கண்டு சேர நன்னாட்டில் அமைதி நிலவச் செய்து செங்கோல் ஆட்சி செய்து வந்தார். இவர் மன்னர் குலத்தில் பிறந்திருந்தும், படைபலமும் பெரும் செலவமும் பெற்றிருந்தும், மானுட வாழ்க்கையில் பற்றின்றி மாலவன் சேவையை மனம் உகந்து செய்து வந்தார். எப்பொழுதும் அவன் அடியார்களால் சூழப் பெற்றவராய் அவன் நாமம் போற்றியும், அவன் திருவிளையாடல்களை அடியார்கள் கூறக் கேட்டும் வந்தார்.



# குலசேகராழ்வார்

திருவரங்கனையும் திருவேங்கடவனையும் மற்றும் அவன் உறையும் மற்ற தலங்களையும் தரிசித்து அத்தலங்களிலே உள்ள அடியாரோடு இணையும் நாள் எந்நாளோ என்ற ஏக்கத்தில் இருந்தார்.புராண இதிகாசங்களின் சாரமான முகுந்த மாலையைப் பாடி அருளினார். ஸ்ரீ வால்மீகி பகவான் அருளிச் செய்த இராம காதையின் மீது மிகுந்த பற்றுடையவராய் அதை ஓதச் செய்து கேட்டு மகிழ்வதை பொழுது போக்காய்க் கொண்டிருந்தார்.

# குலசேகராழ்வார்



ஒருநாள் இராமன் சீதைக்குக் காவலாய் இலக்குவனை நிறுத்தி விட்டுத் தனியொருவராய் கரன் திரிசிரன் தூஷணன் முதலான பதிநான்காயிரம் அரக்கர்களுடன் போரிடத் துணிந்த கதை கேட்க நேர்ந்தது. உடனே "என்னப்பன் இராமனுக்கு என்னாகுமோ? துணையாய்ச் செல்ல எவருமில்லையே?" என்று எண்ணினார். தன் நால்வகைப் படையையும் திரட்டி தம் தலைமையில் இராம பிரானுக்கு உதவி செய்யக் கிளம்பினார்.

# குலசேகராழ்வார்



இதைக்கண்ட அமைச்சர்கள் அரசர் தம் சொல்லை கேட்கும் மனநிலையில் இல்லை என்பதனை உணர்ந்தனர். தூதுவர் போல் சிலரை அனுப்பி “மன்னா! இராமபிரான் தனியொருவராகவே அந்தப் பதிநான்காயிரம் அரக்கர்களை அழித்து வெற்றியுடன் திரும்பினார்” என்று சொல்லச் செய்தனர். மகிழ்ந்த மன்னரும் படையோடு நாடு திரும்பினார்.

# குலசேகராழ்வார்



கவலையில் ஆழ்ந்த அமைச்சர்கள் கூடி இத்தகைய குழப்பங்களைத் தவிர்க்க என்ன செய்யலாம் என ஆலோசித்தனர். இதற்கெல்லாம் வைணவ அடியாரோடு வேந்தன் கொண்டிருக்கும் தொடர்பே காரணம் என்ற முடிவிற்கு வந்தனர். தொடர்பைத் துண்டிக்க ஓர் திட்டமும் தீட்டினர். அரன்மனையுள் அரசன் வணங்கும் பெருமாளின் திருவாபரணப் பெட்டியில் இருந்தவற்றுள் மிக அழகான ஒரு நவரத்தின மாலையை எடுத்து மறைத்து வைத்தனர்.

# குலசேகராழ்வார்



அரசனிடம் ஆபரணத்தைத் திருடியது அடியவரே என்று பழி சுமத்தினர். ஒரு குடத்தினுள் நச்சுப் பாம்பொன்றை இட்டு மூடினர். அடியவர் தாம் குற்றம அற்றவர் எனில் அக் குடத்தில் கைவிட்டு மீள வேண்டும் என்றனர். அரசரோ அடியவரைத் தடுத்து அவர்கள் சார்பாக “பரனன்பர் கொள்ளார்” என்று கூறி கோவிந்தனை வேண்டிக் குடத்தில் கைவிட்டு வெற்றிகரமாக மீண்டார். அமைச்சர்கள் மனம் வருந்தி மன்னன் தாள் பணிந்து நவரத்தின மாலையை சமர்ப்பித்து மன்னிக்க வேண்டினர்.

# குலசேகராழ்வார்



அடியாரை மதிக்காத, பொறுக்காத மக்களிடையே வாழ விருப்பற்றவராய் சேரலர்கோன் தன் மகனுக்கு முடி சூட்டி வைத்து "ஆனான செல்வத்து அரம்பையர்கள் தற்சூழ வானாளும் செல்வமும் மண்ணரசும் யான் வேண்டேன்" என்று தன் விருப்பத்திற்குரிய அடியார் குழாத்தோடு திருவரங்கம் சென்றடைந்தார். அடியவர் குழாத்தொடு கூடியருந்து, அணியரங்கத்தம்மானுக்கு பணி செய்து, ஆழ்வார் பெருமாள் திருமொழி என்ற திவ்யப்ரபந்தத்தை பாடியருளினார்.

# பெருமாள் திருமொழி – ஐந்தாம் திருமொழி

**தரு துயரம் தடாயேல்* உன் சரண் அல்லால் சரண் இல்லை***
**விரை குழுவும் மலர்ப் பொழில் சூழ்* வித்துவக்கோட்டு அம்மானே***
**அரி சினத்தால் ஈன்ற தாய்* அகற்றிடினும்* மற்று அவள்தன்**
**அருள் நினைந்தே அழும் குழவி* அதுவே போன்று இருந்தேனே** 1

வித்துவக்கோடு என்பதற்கு – வித்வான்கள் கூடிய இடம் என்று காரணப் பொருள் கூறுவர். பிள்ளைப் பெருமாளையங்கார் நூற்றெட்டுத் திருப்பதியந்தாதியில் "திருவிற்றுவக்கோடு சேர்ந்தார் பிறவி கருவிற்றுவக் கோடுங்காண்" என்றிருப்பதனால், வித்துவக் கோடு அல்ல; விற்றுவக்கோடு என்பர் சிலர். அவ்விடத்திலும் "திருவித்துவக்கோடு" என்றே பாடமென்பர் பெரியோர்: இவ்வளவால் எதுகையின்பம் குன்றாது இத்திருமொழியின் ஈற்றுப் பாசுரத்திலும் இங்ஙனமே பாடமாம். இத்திவ்யதேசம் மலைநாட்டில் "திருமிற்றக் கோடு" என வழங்கப் படுகின்றது.

# பெருமாள் திருமொழி – ஐந்தாம் திருமொழி

**கண்டார் இகழ்வனவே* காதலன்தான் செய்திடினும்***
**கொண்டானை அல்லால்* அறியாக் குலமகள் போல்***
**விண் தோய் மதில் புடை சூழ்* வித்துவக்கோட்டு அம்மா* நீ**
**கொண்டாளாயாகிலும்* உன் குரைகழலே கூறுவனே 2**

விண் தோய் மதில் – ஆகாயத்தை அளாவிய மதில்கள்;

புடைசூழ் – எப்புறத்தும் சூழப் பெற்ற;

வித்துவக்கோடு அம்மா – திருவித்துவக் கோட்டில் எழுந்தருவியிருக்கிற ஸ்வாமிந்!

காதலன் தான் – கணவனானவன்;

கண்டார் இதழ்வனவே செய்திடினும் – பார்ப்பவர்களனைவரும் இகழத் தக்க செயல்களையே செய்தாலும்;.

# பெருமாள் திருமொழி – ஐந்தாம் திருமொழி

**மீன் நோக்கும் நீள் வயல் சூழ்* வித்துவக்கோட்டு அம்மா* என்–**
**பால் நோக்காயாகிலும்* உன் பற்று அல்லால் பற்று இலேன்***
**தான் நோக்காது* எத்துயரம் செய்திடினும்* தார்–வேந்தன்**
**கோல் நோக்கி வாழும்* குடி போன்று இருந்தேனே 3**

மீன் நோக்கும் – மீன்களெல்லாம் (தாம் வஸிப்பதற்கு மிகவும் தகுதியான இடமென்று) ஆசையோடு பார்க்கிற (நீர்வளம் மிக்க);

நீள் வழல் சூழ் – விசாலமான கழனிகள் சூழ்ந்த;

வித்துவக்கோடு – திருவித்துவக் கோட்டில் எழுந்தருளியுள்ள;

அம்மா – பெருமானே;

என்பால் – அடியேன் மீது;

# பெருமாள் திருமொழி – ஐந்தாம் திருமொழி

**வாளால் அறுத்துச் சுடினும்* மருத்துவன்பால்***
**மாளாத காதல்* நோயாளன் போல் மாயத்தால்***
**மீளாத் துயர் தரினும்* வித்துவக்கோட்டு அம்மா* நீ**
**ஆளா உனது அருளே* பார்ப்பன் அடியேனே** 4

நீயே எனக்கு ஸர்வவிதாக்ஷகன் என்று நான் துணிந்த பின்பு, நீ எனக்கு எவ்வளவு துன்பங்களை இவ்விபூதியிலே தந்தருளினாலும் அவற்றையெல்லாம் நான் நன்மையாகவே கருதி மிக்க நன்றியறிவு பாராட்டி மேன்மேலும் அன்பு செய்து வருவேனேயன்றி உன்னைச் சிறிதும் குறை கூறமாட்டேன் என்பதை உபமாநத்தால் விளக்கினார்.;

# பெருமாள் திருமொழி – ஐந்தாம் திருமொழி

வெங்கண்-திண்களிறு அடர்த்தாய்* வித்துவக்கோட்டு அம்மானே*
எங்குப் போய் உய்கேன்?* உன் இணையடியே அடையல் அல்லால்*
எங்கும் போய்க் கரை காணாது* எறிகடல்வாய் மீண்டு ஏயும்*
வங்கத்தின் கூம்பு ஏறும்* மாப் பறவை போன்றேனே 5

வெம் கண் – பயங்கரமான கண்களையுடைய;
திண் களிறு – வலிய (குவலயாபீடமென்னும்) யானையை;
அடர்த்தாய் – கொன்றவனே;

# பெருமாள் திருமொழி – ஐந்தாம் திருமொழி

**செந்தழலே வந்து* அழலைச் செய்திடினும்* செங்கமலம்**
**அந்தரம் சேர்* வெங்கதிரோற்கு அல்லால் அலராவால்***
**வெந்துயர் வீட்டாவிடினும்* வித்துவக்கோட்டு அம்மா* உன்**
**அந்தமில் சீர்க்கு அல்லால்* அகம் குழைய மாட்டேனே** 6

செம் தழலே வந்து – செந்நிறமுடைய நெருப்பு (தானாக) அருகில் வந்து; அழலை செய்திடினும் – வெப்பத்தைச் செய்தாலும்; செம் கமலம் அந்தரம் சேர்வெம் – செந்தாமரைகள் வானத்தில் தோன்றுகிற வெவ்விய; கதிரோற்கு அல்லால் – கிரணங்களையுடைய ஸூர்யனுக்கு மலருமே யல்லது; அலரா – (நெருப்புக்கு) மலரமாட்டா;

# பெருமாள் திருமொழி – ஐந்தாம் திருமொழி

**எத்தனையும் வான் மறந்த* காலத்தும் பைங்கூழ்கள்***
**மைத்து எழுந்த மா முகிலே* பார்த்திருக்கும் மற்று அவை போல்***
**மெய்த் துயர் வீட்டாவிடினும்* வித்துவக்கோட்டு அம்மா* என்**
**சித்தம் மிக உன்பாலே* வைப்பன் அடியேனே** 7

வான் – மேகமானது;

எத்தனையும் மறந்த காலத்தும் – எவ்வளவு காலம் மழை பெய்யாமல் உபேக்ஷித்தாலும்;

பைங் கூழ்கள் – பசுமை தங்கிய பயிர்கள்;

மைத்து எழுந்த மாமுகிலே பார்த்து இருக்கும் – கருநிறங் கொண்டு கிளம்புகின்ற பெரிய மேகங்களையே எதிர்பார்த்திருக்கும்;

அவை போல் – அப்பயிர்கள் போல;;

# பெருமாள் திருமொழி – ஐந்தாம் திருமொழி

தொக்கு இலங்கி யாறெல்லாம்* பரந்து ஓடித்* தொடுகடலே
புக்கு அன்றிப் புறம்நிற்க* மாட்டாத மற்று அவை போல்*
மிக்கு இலங்கு முகில்-நிறத்தாய்* வித்துவக்கோட்டு அம்மா* உன்
புக்கு இலங்கு சீர் அல்லால்* புக்கிலன் காண் புண்ணியனே 8

மிக்கு இலங்கு – மிகுதியாய் விளங்குகிற;

முகில் – காளமேகம் போன்ற;

நிறத்தாய் – கரியதிருநிறமுடையவனே;

# பெருமாள் திருமொழி – ஐந்தாம் திருமொழி

நின்னையே தான் வேண்டி* நீள் செல்வம் வேண்டாதான்*
தன்னையே தான் வேண்டும்* செல்வம்போல் மாயத்தால்*
மின்னையே சேர் திகிரி* வித்துவக்கோட்டு அம்மானே*
நின்னையே தான் வேண்டி* நிற்பன் அடியேனே 9

நின்னையே வேண்டி – உன்னையே விரும்பி;

நீள் செல்வம் வேண்டா தான் தன்னையே – மிக்க ஸம்பத்தை விரும்பாதவனையே;

தான் வேண்டும் – தானாகவே வந்து சேர விரும்புகிற;

செல்வம் போல் – அந்த ஐச்வரியம் போல;

மாயத்தால் – (உன்) மாயையினால்;

# பெருமாள் திருமொழி – ஐந்தாம் திருமொழி

வித்துவக்கோட்டு அம்மா* நீ வேண்டாயே ஆயிடினும்*
மற்று ஆரும் பற்று இலேன் என்று* அவனைத் தாள் நயந்து*
கொற்ற வேல்-தானைக்* குலசேகரன் சொன்ன*
நற்றமிழ் பத்தும் வல்லார்* நண்ணார் நரகமே 10

நீ வேண்டாயே ஆயிடினும் - நீ (என்னை) உபேக்ஷித்தாயாகிலும்;

மற்று ஆரும் பற்றிலேன் என்று - வேறு எவரையும் நான் சரணடைய மாட்டேன்;

என்று - என்று (அத்யவஸாயத்தை வெளியிட்டு);

அவனை தாள் நயந்து - அவ்வெம்பெருமானது திருவடிகளிலேயே ஆசை கொண்டு

